என்றார்கள். இதற்கு விளக்கம் கேட்டேன் நான். சொன்னார்கள்: "குழந்தையிடம் தந்தைக்கு இருக்கும் அன்பு இருக்கிறதே அது அலாதியானது. குழந்தை செய்யும் தவறுகள் எல்லாம் தந்தைக்குத் தெரிவதே இல்லை. அதிலும் பிறர் எடுத்துக்காட்டி விட்டாலோ கன கோபம்தான் வரும். தவறை தவறு அல்ல என்று சாதிப்பதில் தந்தை முனைந்து விடுவார்: ஏன் சண்டைக்கே புறப்பட்டுவிடுவார். இதேபோலத்தான் தெய்வத்தினிடமும், தெய்வம் செய்கின்ற காரியங்கள் பல நமக்குப் புரிவதில்லை. ஆனால் ஒரு அசையாத நம்பிக்கை அது செய்கின்ற காரியங்கள் அத்தனையும் சோடையல்ல என்று. சோடையாக இருந்தால் அது தெய்வம் செய்ததல்ல என்ற திடமான 'அபிப்பிராயம்" என்றார்கள். **டி.கே.சி.யின் கம்பன் பக்திக்கு** எவ்வளவு அற்புதமான வியாக்யானம்! இந்த வியாக்யானத்தைப் புரிந்து கொண்டால் டி.கே.சி.யோடேயோ அல்லது டி.கே.சி.யுடைய திருத்தங்களோடேயோ எவரும் முட்டவேண்டிய அவசியமே இருக்காதே.

டி.கே.சி. கம்பனோடு நாற்பது வருஷ காலத்திற்குமேலாக வாழ்ந்தவர்கள். அவன் காவியத்தில் நுழைந்திருக்கும் செருகு கவிகளை அகற்றவோ, அவன் கவிகள் எழுதுபவரது கவனக் குறைவால்-பிழைபட எழுதியிருந்தால் அந்தப் பிழைகளைத் திருத்தவோ தகுதி உடையவர்கள், உரிமையும் உடையவர்கள். இந்தஉரிமையை மறுக்க, நாம் யார்? என்றுதான் கேட்கத் தோன்றுகிறது எனக்கு.

'கம்பருக்கு நான் செய்த சேவைகளில் எல்லாம் பெரிய சேவை அவரை அனுபலி த்ததுதான். நான் அறிந்த காரியத்தை ஊரார் அறிந்ததில்லையே என்று சொன்னால் ஈடுபாட்டைக் குறிக்கிறதே. ஒழிய அகம்பாவத்தை குறிக்காது, என்று அவர்கள் சொல்லும்போது அவர்கள் உள்ளத்தை யல்லவா அப்படியே திறந்து காட்டுகிறார்கள்? இது போதாதா நமக்கு?

☆ ☆ ☆ ☆

கம்பர் பிறந்தது **திருவழுர்தூரிலே,** வளர்ந்தது **வெண்ணெய் நல்லூரிலே வள்ளல் சடையப்பர்** இல்லத்தில். கம்பன் காவியம் பாடியது யாருக்காக என்றால், முதலி ல் தன் ஆத்ம திருப்திக்காக: தன் ஆத்ம அனுபவங்களை வெளியிடுவதற்காக: நல்ல கதை என்பதற்காக: உத்தமோத்தமனான ராமனை உருவாக்கிக் காட்டலாம் என்பதற்காக: **தெய்வமாக்கவி வள்ளுவன்** வையத்தில் வாழ்வாங்கு வாழ வகுத்த வழிகளை நல்ல கவிதை உருவத்தில்,, கதை மூலமாகச் சொல்லலாம் என்பதற்காக; எல்லாவற்றிற்கும் மேலாக கவிதையை அனுபவிக்கும் வள்ளல் சடையப்பர் கேட்டு இன்புறுவதற்காக. இந்த உண்மையைத் தெரிந்திருந்தார் திருநெல்வேலியில் ஒரு அன்பர்: டிகே.சி அவர்களின் பள்ளித்தோழர், **திரு.பி. ஆவுடையப்ப பிள்ளை.** அவர் தமிழ்க் கவிஞர் அல்ல. என்றாலும் அவருக்குப் பாடவந்தது. பாட்டு இதுதான்:

**கம்பரும் வெண்ணெய் நல்லூர்**
**வள்ளலும் கலந்து பேசி**

**இம்பரில் பிறப்போ மாயின்**
**இருகுணம் ஒருங்கு சேர**

**உம்பரின் தேவ தேவை**
**ஒருதரம் கசிந்து கேட்க**

**செம்பது மத்தோன் செய்தான்**
**சிதம்பர நாத மாலை.**

உண்மைதான். வள்ளண்மையும், கவிதா ரஸம் அறியும் ஆற்றலும் நிறைந்திருந்த ரஸிகமணியவர்களைக் கம்பனும் சடையப்பரும் சேர்ந்தமைந்த ஒருரு என்று கொள்வதில் வியப்பில்லைதான்.

ஆனால் நான் இதற்கு மேலும் ஒன்று சொல்வேன். அசோக வனத்தில் சிறை இருக்கிறாள் சீதை. அவளைத் தேடித் தென்திசை வந்த வானர வீரர்களில் அனுமன் கடல்கடந்து வந்து, இலங்கையில் அசோக வனத்தில் காண்கின்றான். அனுமனை அனுப்பும்போது, சீதையைக் கண்டு வருவான் என்று நம்பினான் காகுத்தன். ஆனால் அனுமன் ஆற்றலை அறிந்த கவிகுலக் கோனாகிய சுக்ரீவனோ கண்டு விட்டால் சீதையைக் கொண்டே வந்துவிடுவான் என்று எண்ணினான். இதை உணர்ந்த அனுமானும் சீதையை அவள் இருந்த பர்ணசாலையை-ஏன்? பர்ணசாலையிருந்த அசோகவனத் தையே பேர்த்து எடுத்து செல்லத் துடிக்கிறான். அந்த ஆற்றல் உடையவனே தான் என்பதைச் சீதைக்குப் புலப்படுத்தத் தன் பேருருவைக் காட்டுகிறான். அனுமனுடைய அந்தப் பேருருவைப் பார்த்துவிட்டு, சீதை சொல்கிறாள்: என்னைக் கண்டுபிடிக்க நீ ஒருவன் இருந்தாய். நீ ஒருவன் இல்லாது போயிருந்தால் ராமனுடைய புகழை யார் அறியப் போகிறார்கள்? ராமனுடைய அருளும் புகழும், உன்னாலன்றோ ஊழி உள்ளளவும் நிலை பெறுகிறது?" என்று இதைச் சொல்லுகிறான் கம்பன்

**ஆழி நெடுந்தகை ஆண்தகைதன்**
**அருளும் புகழும் அழிவின்றி**

**ஊழி பலவும் நிலை நிறுத்தற்கு**
**ஒருவன் நீயே உளயானாய்**

என்று, இந்தப் பாட்டைப் பாடும்போது, கம்பன் தனக்குப் பின்னால் ஆயிரம் வருஷத்திற்கு அப்பால் தோன்ற இருக்கும் டிகே.சியை நினைத்திருக்க வேண்டும். 'ஆம்! அப்பா! என் புகழை நிலை நிறுத்த **நீயே ஒருவன் உளயானாய்**' என்று சொல்லிச் சொல்லி மகிழ்ந்திருக்கவும் வேண்டும், இல்லையா?

**வாழி கம்பனும் டி.கே.சியும்.**

# கம்பன் கல்வியில் பெரியன்

-அமரர் கம்பன் அடிப்பொடி-

கம்பனின் காப்பியத்தை, கம்ப சித்திரம், கம்ப சூத்திரம் என்றெல்லாம் பலவாறாகப் பண்டுதொட்டே பாராட்டி வருவதற்கு அடிப்படைக் காரணம் அவனுடைய அறிவாற்றலே; அதாவது கல்வி வளமே!

1. "சொல்லின் செல்வன்"
2. "கேள்வி நூல் மறை வலான்"
3. "ஆற்றலும், நிறைவும், கல்வி அமைதியும், அறிவும் என்னும் வேற்றுமை இவனோடு இல்லை"
4. "இங்கு, இவன் இசைகள் கூரக் கல்லாத கலையும், வேதக் கடலுமே உலகத்து எங்கும் இல்லாத"
5. "செவிக்குத் தேன் என இராகவன் புகழினைத் திருத்தும் கவிக்கு நாயகன்"

என்றெல்லாம் அனுமனைக் கணித்தறிந்து காட்டுகிறானே, அந்த அருமைப்பாடுகள் அனைத்தும் அப்படியே கம்பனுக்குப் பொருந்தும். ஆம், கம்பன் கல்லாத, கற்றறியாத, விஞ்ஞான மெய்ஞ்ஞானக் கலை

## OUR NEED

In the history of any country there are periods when integrity of character in the individuals slips down in an epidemic of selfishness.At such moments. the few who still have character and culture can maintain their poise within only when they have an ideal of a perfect person to hold on. Either such a perfect person must be thrown up as a leader in our society or there must be a picture of the ideal person in the mental horizon of the people, to inspire them and help them to walk out of their personal ego-centric desire-prompted life of shameless arrogance.

A corrupt and morally broken down community can never build up a nation. If the individuals are not integrated the community cannot be welded together to form a strong people, striving to direct the economic, political and social destinies of a country into a brilliant and luxurious future.

Kambar appears to have provided us with such an inspiring ideal, who can not only excite the good in the uneducated masses. but even the sophisticated and the educatedcan feel this special thrill in the ideal person which Kambar projects in his poetry.

When this ideal is held uplifted. by the growing dynamic teenagers of the times, the entire situation has a galvanizing glory about it.

SWAMI CHINMAYANANDA

எதுவுமே இல்லை என்று அவன் காப்பியத் துணை கொண்டே நிரூபித்துவிடலாம். அதனால்தான் தான் சொல்ல வேண்டியவற்றை எல்லாம் அனுமன் வாய்மொழியாகவே சொல்லித் தீர்க்கிறான் கம்பன். கம்பனுடைய அறிவாற்றல் பளிச்சிடுகிற எண்ணற்றவற்றுள் ஒரு சிலவற்றைப் பார்க்கலாம் இப்பொழுது:

விசுவாமித்திரன் பின்னே, தம்பி இலக்குவனுடன் இராமன், மிதிலை நகரிலே போய்க்கொண்டிருக்கிறான். கன்னிமாடத்திலே சீதை நிற்கிறாள். இருவர் கண்களும் எதிர்படுகின்றன. ஒருவரை ஒருவர் தம் உள்ளம் ஈர்த்தன. காதல் தன் கைவரிசையைக் காட்டத் தொடங்கிவிட்டது. மிதிலை மன்னனால் உபசரிக்கப்பட்டு ஒரு பெரிய விருந்தினர் இல்லத்திலே மூவரும் தங்குகிறார்கள். முனிவனும் இலக்குவனும் ஒருபுறத்தில் உறங்குகின்றனர். இராமனோ தனியாக ஒரு திறந்த மாடத்தில் படுக்கையை விரித்தான். உறக்கம் வரவில்லை. ஆனாலும் படுத்துக்கொண்டுதான் கிடக்கிறான். நம் கண்ணுக்கு . இராமன் தனியனாய்க் கிடப்பதாகவே தோணுகிறது. ஆனால் மனத்துவ அறிவாற்றல் படைத்த கம்பனோ இராமனுக்குத் துணை ஐந்து என்கிறான். பாட்டையே பார்க்கலாம்.

**“முனியும், தம்பியும் போய், முறையால் தமக்கு**
**இனிய பள்ளிகள் எய்திய பின், இருட்**
**கனியும் போல்பவன், கங்குலும், திங்களும்,**
**தனியும், தானும், அத் தையலும், ஆயினான்.”**

கங்குல், திங்கள், தனி, தான், அத் தையல் ஆகியவைதான் அந்த ஐந்து! கங்குல் என்றால் இரவு! திங்கள் என்றால் முழுமதி; தனி என்றால் துணையின்மை; அத் தையல் என்றால், கன்னி மாடத்திலே கண்ட பெண் என்பது நமக்கெல்லாம் தெரிந்ததுதான். ஆனால் 'தான்' என்ற ஒன்றையுமல்லவா சொல்லுகிறான்? தான் என்றால் என்ன? தன்னை மறவாத் தன்மை (செல்ப் கான்ஷியஸ் நெஸ்) என்கிறார்களே அதுதான், 'தான்' என்பது என்று விளக்கம் தருகிறான். அந்தத் 'தான்' இருக்கிறதே அதுவே ஒரு நோய் என்பர் மனத்துவ அறிஞர்கள். தன்னை மறந்து உறங்க வேண்டிய நேரத்திலும் மனிதனை உறங்கவிடாமல் தன்னைப் பற்றியே எண்ணி எண்ணி ஏங்கி வெதும்பிக் கொண்டிருக்கச் செய்கிறது விரகதாபம். அது இயல்பு என்றாலும் அதை நமக்கு எடுத்துக்காட்ட கம்பனின் அறிவாற்றல் அன்றோ தேவைப்படுகிறது!

இனி, 'பூத-பௌதிகத் துறையிலே கம்பனின் அறிவாற்றல் எப்படி வெளிப்படுகிறது என்பதைப் பார்ப்போம். இந்த உலகில் காணப்படும் யாவும் ஒரே மூலகத்தையே அடிப்படையாகக் கொண்டவை என்பதையும், ஆனால், அவற்றின் எண்ணளவையும், செறிவளவையும் பொருத்தே பொருள்களின் தன்மையும், குணமும், தரமும், வகையும் வேறுபடுகின்றன என்பதையும் நவீன விஞ்ஞான முடிவுகளால் இன்று நாம் உணருகிறோம். இந்த உண்மையைக் கம்பன் நன்குணர்ந்துள்ளான். அவனது அந்த அறிவாற்றல்

“பூதம் ஐந்தும், விலங்கிய விகாரப் பாட்டின் வேறுபாடுற்ற வீக்கம்'' என்று உரைப்பதிலிருந்து நன்கு புலனாகிறது.

“விலங்குதல்” என்றால், குறுக்கும்

நெடுக்கும், கீழும் மேலுமாய், குழம்பிக் கலத்தல்.

"விகாரப்பாடு" என்றால், கலப்பினால் ஏற்படும் தோன்றல், திரிதல், கெடுதல்.

"வேறுபாடு" என்றால் ஒன்றிற்கு ஒன்று வித்தியாசப்படுதல். எண்ணிக்கை, செறிவு, கலக்கும் முறை ஆகியவற்றின் காரணமாக ஒரே மூலகம் எண்ணற்ற வகையாக மாறுகின்ற மாயத்தை, அற்புதத்தை கம்பனின் அறிவாற்றல் இப்படி ஒரு சூத்திரம் போலச் சுட்டி நிற்கிறது.

அடுத்து, இன்று பிரமாதமாக அடிபடும் அணுவைப் பற்றிய கம்பனின் அறிவாற்றல் எப்படியிருக்கிறது என்பதையும் பார்க்கலாம். மிகச் சமீப காலம் வரை அணு என்றால், அதுதான் சின்னஞ்சிறிய பொருள், அது துண்டிக்கப்பட முடியாத கடைசித் தனிமம் என்றுதான் விஞ்ஞான உலகம் நம்பிக்கொண்டிருந்தது. சமீப கால விஞ்ஞான சோதனையானது அணு என்பது கட்டக் கடைசிப் பொருள் அல்ல: அதையும் உடைக்கலாம் என்று நிரூபித்தது. இந்த நிலைமை இந்தத் தலைமுறையில், நமக்குத் தெரிய ஏற்பட்டதுதான். ஆனால், ஆயிரம் ஆண்டுகட்கு முன் வாழ்ந்த கம்பனின் அணு அறிவை நாம் பார்க்கும்போது மூக்கின்மேல் விரலை வைத்து, ஒரே வியப்புக் கடலுள் மூழ்கிவிடுகிறோம்.

**சொல்லடா, அரி எங்கே என்று உறுமுகிற இரணியனுக்கு,**

**"சாணினும் உளன்; ஓர் தன்மை**
**அணுவினைச் சத கூறு இட்ட**
**கோணினும் உளன்; மாமேருக் குன்றினும்**
**உளன்; இந் நின்ற**
**தூணினும் உளன்; நீ சொன்ன**
**சொல்லினும் உளன்."**

என்று பிரகலாதன் விடை தருகிறான். ஒப்பற்ற அற்பமான, ஒரு அணு இருக்கிறதே, அதை, சம அளவுள்ள நூறு பாகமாகக் கூற செய்யலாம். அதாவது ஒரு ரூபாயை நூறு பைசாக்களாக மாற்றுதலைப்போல, அப்படிக் கூறு செய்தவை ஒன்றுக்கொன்று ஏற்றத் தாழ்வு இல்லாமல் ஒரே அளவாகும். அந்த நூற்றில் ஒரு பங்குக்குக் "கோண்" என்று பெயர். அந்தக் கணிதப் புள்ளியை நம் போன்றவர்களும் புரிந்துகொள்ள வேண்டும் என்னும் பெருங்கருணையால், கம்பன்

**"ஓர் தன்மை அணுவினைச் சத கூறு இட்ட கோண்"**

என்று, பொருளோடு சொல்லைக் கூறி விளங்கவைக்கிறான். இல்லாவிட்டால் 'கோண்' என்ற சொல்லை நாம் அறியவோ, அன்றிப் புரிந்துகொள்ளவோ முடியுமா? நம் நாட்டில் அணு அறிவும், அணு ஆராய்ச்சியும் இருந்திருக்கத்தான் வேண்டும் என்பதை, செய்தி அளவாகவேனும் இன்று நாம் ஊகிக்க முடிகிறது என்றால் அதற்குக் காரணம் கம்பனின் அறிவாற்றல்தான், இல்லையா?

இனி நிலவியல், வானியல் பற்றிய அறிவாற்றல் கம்பனிடம் மிளிர்வதைப் பார்ப்போமா? நாள், மீன், கோள், ஞாயிறு, திங்கள், வால்மீன் முதலியவற்றைப் பற்றியெல்லாம் கம்பன் நன்கறிந்திருக்கிறான். சூரியன் எப்பொழுதும் பூமத்திய ரேகையில் செல்வதில்லை. ஆறு மாதம் தெற்கிலும், ஆறு மாதம் வடக்கிலும் சார்ந்தே சஞ்சரிப்பான். தெற்கைச் சார்ந்து சஞ்சரிக்கும் ஆடி முதல்மார்கழி வரையுள்ள அரை ஆண்டிற்கு தெட்சணாயனம் என்றும், வடக்கைச் சார்ந்துசஞ்சரிக்கும் தை முதல் ஆனி வரையுள்ள அரை ஆண்டிற்கு உத்தராயணம்

என்றும் அக்காரணம் பற்றியே பெயர் ஏற்படலாயிற்று. இவற்றை எல்லாம் கம்பன் தேர்ந்து தெளிந்தவன். இந்த அறிவாற்றல் கம்பனின் கற்பனை வளம் சிறக்கக் கை கொடுத்துதவுகிறது.

வேலையுள் இலங்கை என்னும் விரிநகர் இருக்கிறதே, அது பூமத்திய ரேகையை ஒட்டியிருக்கிறது, ஆகவே அதன் நேர் உச்சியில் சூரியன் சஞ்சரிப்பதில்லை. அது முற்றிலும் நிலவியல், வானியல் நியதிக்கு உட்பட்டதுதான். ஆனால், கம்பனோ இராவணனின் பேராற்றலையும், சர்வாதிகாரத்தையும் புலப்படுத்த, இந்த இயற்கை நியதியை பயன்படுத்திக் கொள்ளுகிறான். கம்பனின் அறிவாற்றல் அப்படி அழகு செய்கிறது காப்பியத்தை. இனி அவன் கற்பனையைக் காணலாம்.

இராமனின் சொல் கடவாத தூதனாகிய அங்கதன் இலங்கையை நோக்கிப் புறப்படுகிறான். வீரன் வெஞ்சிலையில் கோத்த அம்பு என விசையில் போன அவன் நேரே சாக்ஷாத் ராவணேச்வரன் திருமுன்னரே வந்து குதிக்கிறான். எத்துணையோ கட்டுக் காவல்; கொத்தள வாயில் திறக்கப்படவில்லை; கோட்டைச் சுவரோ வான முகட்டைத் தொட்டுக் கொண்டிருக்கிறது. இராவணனுக்கு அஞ்சி, அவன் ஆணைக்குக் கட்டுப்பட்டுத்தான் சூரியனும் அந்நகரத்தை நேர் உச்சியில் தாண்டிச் செல்லமாட்டானாம்! தப்பித் தவறி மறந்தேயும் அவன் நேர் உச்சியில் சஞ்சரித்து விடப்படாது என்பதற்காகத்தான் மதில் அத்துணை உயர்ந்ததாக அமைக்கப் பட்டதாம். எனவே, சூரியன் எப்பொழுதும் இலங்காபுரியின் உச்சியில் செல்லாமல் தெற்கிலும் வடக்கிலும் விலகிச் செல்கிறானாம். அத்தகைய மதிலையும் நேராகக் கடந்து சென்றானாம் அங்கதன் அதைக் கம்பன்,

**“. . . .அயோத்தி வந்தான் சொல் கடவாத தூதன் வெயில் கடந்திலாத, காவல், மேருவின் மேலும் நீண்ட, எயில் கடந்து, இலங்கை எய்தி, அரக்கனது இருக்கை புக்கான்”**

என்று கூறுகிறான். கம்பனின் அறிவாற்றல் இப்படியே இன் இன்னும் எத்தனையோ துறைகளில் வெளிப்படுகிறது. அவற்றையெல்லாம் ஆர அமர இருந்து படித்துப் பார்த்தால் தமிழ்த்தாயின் தவப் புதல்வன், தன்னேரில்லான், கவிச்சக் கரவர்த்தி கம்பனின் அருமையையும் பெருமையையும், நன்கறிவதுடன் நாமும் வளம் பெறுவோம். அத்தகைய விழுமிய அறிவாற்றல் மிக்கவன் கம்பன். இல்லாவிட்டால் “கல்வியில் பெரியன் கம்பன்” என்ற நிறைமொழி தமிழகத்தில் வேறூன்றியிருக்குமா, என்ன?

---

********************************************************

---

# இலக்குவனுக்கு இணை. . . . .!

*அமரர் கம்பன் அடிப்பொடி*

பெரும்பாத்திரங்களையும், துணைப் பாத்திரங்களையும் , சிறுபாத்திரங்களையும் படைத்து ஆட்டுவிப்பதில் பெரும் வெற்றி பெற்றவன் கம்பன். அவன் காப்பியத்துள் இலக்குவன் ஓர் அற்புத சிருஷ்டி.

இலக்குவன் ஒரு பெரும்பாத்திரமா அல்லது சிறுபாத்திரமா அல்லது இரண்டிலும் அடங்காத துணைப்பாத்திரமா? இதை முடிவு கட்டு முன் பாத்திரங்களின் இலக்கணத்தைச் சிறிது பார்ப்போம்.

பெரும்பாத்திரங்களின் தன்மை என்ன? ஒரு மண்டபத்திற்குத் தூண்கள் எப்படியோ அப்படித்தான் காப்பியத்திற்குப் பெரும்பாத்திரங்கள். எந்தத் தூண் அகற்றப்பட்டாலும் மண்டபம் நிலை குலைந்து விடும். இல்லையா? அங்ஙனமே காவியக் கட்டுக் கோப்புக்குப் பெரும் பாத்திரங்கள் இன்றியமையாதவை. எந்த ஒரு பாத்திரத்தை நாம் நீக்கிவிட்டால் காப்பியம் முடமாகிவிடுமோ அந்தப் பாத்திரம் நிச்சயம் ஒரு பெரும்பாத்திரமேயாகும். பெரும் பாத்திரம் பெரும்பாலும் கதையின் பெரும் பகுதியில் தோன்றக் கூடும். ஏகதேசம் சில இடங்களில் மட்டும் தோன்றிவிட்டு மறைந்தும் போகலாம்.

சிறுபாத்திரமோ இந்த நிலைக்கு முற்றிலும் மாறுபட்டது. ஒன்றிரண்டு நிகழ்ச்சிகளில் தோன்றித் தன் பணியை நிறைவேற்றுவதுடன் அமைந்துவிடும். அப்புறம் அந்தக் கதைக்கு அது யாரோ தான் அன்றியும், ஒரு மண்டபத்தில் காணப்படும் சிற்பம் தோரணங்கள், ரஸக்குண்டுகள் போல சிறுபாத்திரங்கள் கதைக்கு ஓரளவு அணி செய்வனவே.

ஆயினும் அவை இல்லாமல் போனால் காவியக்கட்டுக் கோப்பு மூளியாகிவிடாது. கதை பாதிக்கப் படமாட்டாது. என்றாலும் சிறு பாத்திரங்கள் இன்றியமையாதவை அல்ல என்றும் கூறிவிடமுடியாது.

எப்படிப்பார்த்தாலும் இலக்குவன் இந்த இரு வகையிலும் அடங்கான். கதையின் தொடக்க முதல் இறுதிவரை இலக்குவன் நீக்கமற நிறைந்திருக்கிறான். எனவே இலக்குவனைச் சிறுபாத்திரம் என்பது பொருந்தாது. பெரும் பாத்திரம் ஆவானா என்றால் இலக்குவன் எவ்வகையிலும் கதை நடத்தும் ஒரு பாத்திரமாகக் காட்சி கொடுக்கவில்லை. ஆனால் பல பெரும் பாத்திரங்களும் இயங்கிக் கதையை நடத்த இலக்குவன் செய்யும் உதவி அற்ப சொற்பமல்ல. இலக்குவன் துணை இன்றேல் கதை ஊட்டமின்றி மெலிந்து போய்விடும். அந்தக் கணக்கில் பார்த்தால் இலக்குவன் பெரும் பாத்திரங்கட்கெல்லாம் உயிர் என நிற்கிறான். இன்றியமையாப் பாத்திரமாகவும் தோற்றமளிக்கிறான். என்றாலும் கதையின் தொடக்கத்திற்கும் எவ்விதப் போக்கிற்கும் திருப்பத்திற்கும் முடிவுக்கும் அவன் காரணமாக அமையாமையால் அவனைப் பெரும்பாத்திரம் என்பது ஒவ்வாது. எனவே

இலக்குவனைத் துணைப் பாத்திரம் என்பதே முறையாகும்.

துணைப்பாத்திரங்களின் நிலையோ ஓர் அதிசயமான நிலையாகும். பெரும் பாத்திரங்களையும், சிறுபாத்திரங்களையும் படைத்து இயக்குவதைவிடப் பல மடங்கு சிரமமாகும் துணைப் பாத்திரங்களைப் படைத்து ஆட்டுவிப்பது. அதில் கம்பனின் சாதனை ஓர் அற்புத வெற்றியாகும். பெரும் பாத்திரங்களைப் போலத் துணைப் பாத்திரங்கள் தானே இயங்குவன அல்ல. ஆனால் பெரும்பாத்திரங்கள் எத்துணைதான் தானாகவே இயங்கினும் இலக்குவனைப் போன்ற துணைப்பாத்திரங்கள் இன்றேல் கதை சூம்பி இளைத்துவிடும்; பண்பு குறைந்துவிடும்; விறுவிறுப்பு அற்று இளைத்தும் போய்விடும்.

இலக்குவனைத் துணைப் பாத்திரம் என்பதில் பிறிதொரு சிறப்பும் இருக்கிறது. காப்பியத் தலைவனாகிய இராமனுக்குக் காலமெல்லாம் உற்ற துணையாயிருந்தவன் இலக்குவன். உயிரையும் கொடுக்கும் ஒப்பற்ற துணை அவன். எனவே இலக்குவனைத் துணைப் பாத்திரம் என்பது மிகவும் பொருத்தம் இல்லையா?

இனி இலக்குவன் பண்பினைச் சிறிது பார்ப்போம். கூட்டொருவரையும் வேண்டாக் கொற்றவனாம் இராமனே,

**''இலக்குவ! ''உலகம் ஓர் ஏழும்-ஏழும் நீ கலக்குவென்'' என்பது கருதினால் அது விலக்குவது அரிது''**

என்று இலக்குவனைப் பாராட்டு வானாகில், அவன் ஆற்றலைப்பற்றி நாம் என்ன சொல்லக் கிடக்கிறது?

இலக்குவன் என்னும் துணைப் பாத்திரம் எந்தெந்த வகையில் எல்லாம் காப்பியத் தலைவனுக்குத் துணையாக விளங்குகிறான் என்று பார்த்தால் இத்துணைப் பேராற்றல் உள்ள இலக்குவன் கல்வி, அறிவு, ஒழுக்கம், அடக்கம், தியாகம் முதலி யவற்றாலும் எத்துணை விழுமியவனாக விளங்குகிறான் என்பது புலப்படும். இத்தகைய ஒரு சிறந்த துணைப்பாத்திரத்தைப் படைத்த கவிதைத் தச்சனாகிய கம்பனின் ஒப்பற்ற திறனை நாமும் கூட நன்குணரலாம்.

தம்பியாய்த் தோன்றிய இலக்குவன் இராமனுக்கு இளமைப் பருவத்தில் இணை பிரியாத் தோழனாகவும் விளங்குகிறான். காலை மாலைக் கடன் கழிக்கும் போதும், உலவும் காலமும், குளிக்கும் பொழுதும், கலைபயில் நேரமும், உண்ணும் காலையும், உறங்கும் சமையமும் கூட ஒருவரை ஒருவர் பிரியாத இணையாய் வாழ்கின்றனர் இராம-இலக்குவர்.

ராமன் காட்டுக்குச் செல்லவேண்டிய நிலை ஏற்பட்ட பொழுது, தனக்கு எவ்வித நிர்ப்பந்தமும் இல்லாதிருந்தும், ராமன் எவ்வளவோ தடுத்தும் கூட, உடன் செல்லத் துணிகிறான் இலக்குவன்.

**"நீர் உள எனில், உள மீனும்-நீலமும்;**
**பார் உள எனில், உள யாவும்; பார்ப்புறின்,**
**நார்உள தனு உளாய்! நானும், சீதையும்,**
**ஆர் உளர் எனில் உளேம்? அருளுவாய்!"**

என்பது முதலாக இலக்குவன் பேசும் பேச்சு, இராமனைப் பிரிதல் என்பது இலக்குவனுக்கு எண்ணவும் முடியாத ஒன்றென்பதை எவ்வளவு நயம்படக் காட்டுகின்றது பார்த்தீர்களா?

வேறு வழியின்றி இராமனும் இசைய, இலக்குவன் சீதா ராமரைப் பின்பற்றிக் கானக

மடைகிறான். அங்கெல்லாம் இலக்குவன், தான், இராமனுடைய தம்பி அல்லது தோழன் என்று ஒரு சிறிதும் எண்ணினானில்லை. தன்னை ஒரு வேலைக்காரனாகவே கருதிப் பணி புரிகிறான். அதைத் தன் வாய்மொழியாலும் நன்கு புலப்படுத்துகிறான் நமக்கும்.

**"தன்னுடை உரிமைச் செல்வம் தம்பிக்குத்
தகவின் நல்கி
நல்நெடும் கானம் சேர்ந்தான் நாமமும்
இராமன் என்பான்
இந்நெடும் சிலைவலானுக்கு ஏவல்செய்
அடியன் யானே!"**

என்று அனுமனிடம் ராமனை யாரென உரைக்கும் போது தன்னைப் பற்றிக் கூறுவது இலக்குவன் மனப்பக்குவத்தை எவ்வளவு தெளிவாக உணர்த்துகிறது, பார்த்தீர்களா?

இங்ஙனம் அடியவன் நிலையில் திரியாது ஆண்டு பதினான்கும் அருமையாய்ப் பணி செய்கிறான் இலக்குவன். இவன் இராமனுக்கு ஒப்பற்ற மெய்க்காவலன் ஆக விளங்கி யமையைக் குகன் கூறக் கேட்போம்.

**"அல்லை ஆண்டு அமைந்த மேனி
அழகனும் அவளும் துஞ்ச
வில்லையூன்றிய கையோடும்
வெய்துயிர்ப்போடும் வீரன்;
கல்லை ஆண்டு உயர்ந்த தோளாய்!-
கண்கள் நீர் சொரிய கங்குல்
எல்லை காண்பளவும் நின்றான்;
இமைப்பிலன் நயனம்."**

மேலும் சித்திர கூடத்திற்கு வந்தபிறகு இராமனும் சீதையும் வெய்யில், மழை முதலி யவற்றால் துன்புறாமல் வசிப்பதற்கு ஏற்ப இரு பன்னக சாலைகளை அமைக்கிறான் இலக்குவன். மாலை மயங்கி அந்தி கனிகிறது. சாலைக்கு வருகிறான் ராமன். கண்டதும் ஒரே வியப்பு! அப்படி அருமையாக அமைந்திருக்கிறது சாலை. அரச குமரனான என் தம்பியா இப்படி வனப்புறச் சாலை அமைத்தவன்? என்றெழுந்த ஆச்சரியத் துடன் இலக்குவனைப் பார்த்து,

**"என்று கற்றனை நீ இதுபோல்**
என்றான் துன்று தாமரைக்கண் பனி சோர்கின்றான்."

இராமன் வனத்துள் வைகிய காலமெலாம் இலக்குவன் உடன் உறைந்து ஏவல் செய் அடியவனாய் இருந்தான் என்றால் அவனைக் கேவலம் ஒரு வேலைக்காரனாகவோ, அன்றி வெறும் மெய்க்காவலனாகவோ நாம் எண்ணி விடலாமா? அப்படி நம்மை எண்ணும்படி கம்பன்தான் விட்டுவிடுவானா? அப்புறம் கம்பனின் படைப்புத் திறனுக்குத்தான் என்ன பெருமை இருக்கும்?

அமைச்சனாக, தூதுவனாக, பால் நினைந்தூட்டும் பரிவுடைத் தாயாக, போர்வீரனாக, சேனைத் தலைவனாக, இராமன்தன் பிரதிநிதியாக எல்லாம் அரும்பணியாற்றுகிறான் இலக்குவன். வருபொருள் உரைக்கும் மதிமந்திரியாக அவன் காட்சி தரும் இடம் ஒன்றைப் பார்ப்போம்;

**"அடுத்தவும் எண்ணிச் செய்த லன்றோ அண்ணலே! அமைதி"** என எடுத்துச் சொல்லி மாயமானைத் தானே பிடித்து வருகிறேன் என்றுரைக்கிறான் இலக்குவன். சீதையின் சிணுக்கம் கண்டு ராமன் தானே மானைப் பிடித்து வருகிறேன் என்று புறப்படும் பொழுதும்,

"முன்னமும் மகவாய் வந்த மூவரில்
ஒருவன் போனான்
அன்ன மாரீசன் என்றே அயிர்த்தனென்
இதனை; ஐய!
இன்னமும் காண்டி! வாழி! ஏகு;"
எனஇருகை கூப்பிப்
பொன்அனாள் புக்க சாலை காத்தனன்
புறத்தில் நின்றே"

மாரீசனே இந்த மாயமான் என்பதையும் இதனால் வரப்போகும் துயரைத்தையும் செவ்விதின் உணர்த்தியதுடன் அன்பின் பெருக்கால் "வாழி" என்று தேவையற்ற இடத்தில் வாழ்த்துக் கூறுவதால் தன்னுள்ளத்தைக் கவ்விக் கொண்டிருக்கும் அச்சத்தையும் மெள்ள வெளிப்படுத்துகிறான். ராமன் மாயமானைப் பிடிக்கும் பொருட்டு அதன்பின் சென்றதும் சீதை இருக்கும் பன்னக சாலையைக் காவல் செய்யும் பணியில் ஈடுபட்டுவிடுகிறான். ஒருபானை சோற்றுக்கு ஒரு சோறு பதம் பார்ப்பது போல அமைச்சுத் தொழிலுக்கு எவ்வளவு அருகதையுள்ளவன் இலக்குவன் என்பதைப் பார்த்தோம்.

இராமனுக்குப் பிரதிநிதியாக விளங்கும் இடங்கள் பல. இராமனுக்குப் பதிலாக, இராமன் பக்கத்திலிருக்கும் பொழுதே துணைப்பாத்திரமான இலக்குவனைப் பேசவைத்துச் சங்கடமான சூழ்நிலைகளை எல்லாம் சமாளித்துவிடுகிறான் கம்பன். இவற்றையெல்லாம் உய்த்து உணரும் பொழுதுதான் கவிதா சன்னதம் பெருகி நிற்கும் கம்பனுடைய மேதாவிலாசம் நமக்கும் கூட நன்கு புலப்படுகிறது. அவற்றில் ஒன்றைப் பார்ப்போம்;-

வாலி, மரணத் தருவாயில் இராமனை நோக்கி, "வீரனே! கொடிய வேடனைப் போல மறைந்திருந்து அம்பு எய்தல் முறையோ" என்று கேட்டபொழுது இலக்குவன் இடைப்புகுந்து "முன்பு நின் தம்பி சரணடைய உன்னைக் கொன்று அவனுக்கு அச்சம் தீர்ப்பேன் என்று வாக்குக் கொடுத்தனன் இராமன். கண்முன் ராமனைக் கண்டால் நீயும் உன் ஆவிமீது வைத்த ஆசையில் அடைக்கலம் என்று அண்ணலடி வீழ்வாய்! அப்புறம் நிலைமை தர்மசங்கடமாகிவிடும் என்பது கருதியே அண்ணல் மறைந்திருந்து அம்பு எய்தனன்" என்று தருக்கரீதியில் பதில் உரைத்துச் சங்கடமான நிலையிலிருந்து ராமனைப் தப்புவிக்கிறான் இலக்குவன்.

இப்படிப் பிரதிநிதியாக இருந்து, பேசுவதுடனல்லாமல் முடிசூட்டும் பணியையும் செய்கிறான் இலக்குவன்.

ராமனோ "பதினான்காண்டுகள் வனத் திடையே வாழ்வேன்" என உறுதி பூண்டொழுகுபவன். ஆனதால் குரக்கினம் வாழ் இடமே எனினும் கிட்கிந்தை நல்லதொரு நகரந்தான் என்பது கருதி அதனுட் செல்லவும் இராமன் திருமனம் ஒருப்படவில்லை. அதனாலேதான் கிட்கிந்தையில் சுக்கிரீவனுக்கும், இலங் கையில் வீடணனுக்கும் இலக்குவனே ராமனின் பிரதிநிதியாக இருந்து முடிசூட்டு விழாக்களை நடத்துகிறான்.

இராமன் தூதுவர் என்றால் நமக்கெல்லாம் அனுமனையும், அங்கதனையும் பற்றிய நினைப்பே வரும். ஆனால் இலக்குவனே இராமனின் முதல் தூதுவன் என்பதை நம்மில் பலர் மறந்துவிடுகிறோம்.

சுக்கிரீவன் தான் கொடுத்த வாக்கையும், பெற்ற உதவியையும் மறந்து, புதிதாக வந்தடைந்த செல்வச் செருக்காலும், அரச

மோகத்தாலும், களியாட்டில் மயங்கிக் கிடக்கிறான். அப்படிக் கிடப்பவனுக்கு அறிவுறுத்தி, படைகளுடன் வருகிறானா, மாட்டானா என்பதைத் தெரிந்து வரும்படி இலக்குவனையே தூது அனுப்புகிறான் ராமன்.

காற்றெனக் கூற்றென வருகிறான் இலக்குவன். தாரை, அனுமன் முதலியோர் சினப்பொறி பறக்க வரும் இலக்குவன் நிலை கண்டஞ்சி மிக்க சமாதானம் கூறுகின்றனர். சுக்கிரீவனை மன்னிக்கும்படியும் வேண்டு கின்றனர். இலக்குவன் எத்துணைதான் கோபமுடையவனானாலும் வீரியம் பேணிக் காரியத்தைக் கெடுத்துவிடுபவனல்லன். சினமடங்கி, சுக்கிரீவனை அன்புடன் தழுவிக்கொண்டு செய்ய வேண்டியதை சிந்தைகொளச் செய்கிறான். சுக்கிரீவன் இலக்குவனைப் பணிந்து அரசர்க்கே உரிய அரியாசனத்தில் அமர வேண்டுகிறான். இலக்குவனோ;

**"கல் அணை மனத்தினை**
**உடைக்கை கேசியால்**
**எல் அணை மணிமுடி**
**துறந்த எம்பிரான்**
**புல்லணை வைக யான்**
**பொன்செய் பூத்தொடர்**
**மெல்லணை வைகவும் வேண்டுமே!"**

என்று விடையிறுக்கிறான். இலக்குவன் அந்தக் கரடுமுரடான தரையிலே அமர்ந்து விடுகிறான். இதில் காணப்படுகிற கிண்டலும், ஆத்திரமும் சுக்கிரீவனுக்கு மட்டுமா, எல்லோருக்குமே மனத்தை உருக்க கண்கள் எல்லாம் அருவி பொழியத் தொடங்கி விடுகின்றன. பரிவு மிக்க சிந்தையுடன் இலக்குவனைப்பார்த்து நீராடி விருந்து கொள்ள வேண்டுகின்றனர். அவன் பதில் அனைவோர் உள்ளத்தையும் ஆட்டி விடுகிறது. பதிலைக் கேளுங்கள்;

''இந்த விருந்தெல்லாம் எமக்கு இப்பொழுது வேண்டாதவை. அன்னை ஜானகி இருக்குமிடத்தைக் காண உதவினால் அதுதான் தேவாமிர்தம் தந்ததாகும். அன்றியும் ஒன்றுளது. இராமன் உண்டு மிஞ்சிய இலை காய், கிழங்குகளே எனக்குரிய உணவு. மேலும் நான் உடனே திரும்ப வேண்டும்; நான் சென்றுதான் இராமன் உண்டிக்கு ஆவன செய்துவிடவேண்டும். இனி ஒரு விநாடி தாமதம் செய்தலும் தகாது"

என்றுரைத்து உடனே புறப்பட்டு விடுகிறான். அவன் மட்டுமா திரும்புகிறான். கிட்கிந்தை முழுவதுமே அவனைப் பின் தொடர்கிறது. வெட்டிக் கொண்டு வா என்றால் கட்டிக் கொண்டு வரக்கூடியவன் அல்லவா இலக்குவன்.

ராமன் உயிருக்கோ அன்றிப் புகழுக்கோ ஊறு வரும் என்று தெரிந்தால் உடனே தன் உயிரையும் கொடுக்கத் துணிபவன் இலக்குவன். இதைப்பல இடங்களில் காணலாம். கவந்தனால் அண்ணன் உயிருக்கு ஆபத்துவரும் என்று கருதிய அக்கணமே

**"செரு வெல்ல மாட்டான், மாண்டான்" என்றபின் மேவும் வசை உண்டோ?** என்று மனத்துட் கொண்டு கவந்தனுக்கு இறையாக முந்தும் "இலக்குவனுக்கு நிகரு முண்டோ?" என்று நாம் வியப்படைவோம்.

இனி இராமன் புகழுக்கு இழுக்கு என்று உணர்ந்ததும் இலக்குவன் செய்த முடிவொன்றைக் காண்போம்.

வரிசையாகப் பெற்று வரும் தோல்வியால் இராவணன் மனம் உடைந்து, மான உணர்வும் பேராத்திரமும், பெருஞ்சினமும் பொங்கப் போர்க்களம் நோக்கி வருகிறான். இன்று எப்படியும் வீடணனைத் தீர்த்துக் கட்டிவிடுவது என்று திட்டமிட்டு வருகிறான். வீடணன் போர்க்களத்தில் எதிர்ப்பட்டும் விடுகிறான். தன்னுடைய பெருந்தவப் பயனால் பெற்ற, பிழையாத, வேலொன்றை வீடணன் மேல் குறிவைத்தும் விட்டான். அழிந்தான் வீடணன் என்று அமரர்களும் அகம் குலைந்து அரற்றினர்.

வீடணன் அழிந்தால் ராமனுடைய வீரமே அழிந்தது; அவன் புகழே பொன்றிவிடும்; தீராப் பெரும்பழி வந்து சீராமனைச் சூழ்ந்து கொண்டுவிடும். இதை உணர்ந்தவன் இலக்குவன். வேலின் ஆற்றலையும் தெரிந்தவன். எண்ணுகிறான், எண்ணத்தின் முன் செயலில் இறங்கியும் விடுகிறான்; "தோற்பன்; எனினும் புகழ் நிற்கும்;

**தருமம் தொடரும்;**
**ஆர்ப்ப நல்லவர்,**
**அடைக்கலம் புகுந்தவன்**
**அழியப் பார்ப்பதென்?**

நெடும்பழி வந்து தொடர்வதன் முன்னம் ஏற்பென் என் தனி மார்பில் என்று இலக்குவன் எதிர்ந்தான்" அடைக்கலத்தையும் அண்ணன் புகழையும் காத்து வேலுக்குப் பலி ஆகிறான் இலக்குவன்.

இத்தகைய துணைப் பாத்திரந்தான் இலக்குவன். கம்பன் படைத்த இந்த இலக்குவனுக்கு இணையான துணைப் பாத்திரத்தை வேறெங்கே நாம் காண முடியும்? இலக்குவனுக்கு ஈடு இலக்குவன்தான், இல்லையா?

  

# கம்பனில் தாவரங்கள்

## அணிந்துரை

கேரளப் பல்கலைக் கழகத்தின் தமிழ்த்துறை சிறந்த-பயன்மிக்க--பணியாற்றி வருகிறது. அதன் தலைவர் பேராசிரியர் டாக்டர்.ச.வே. சுப்பிரமணியம், தம்பால் பயிற்சி பெறும் மாணாக்கர்களை எல்லாம் செந்நெறிப் படுத்திப் பொருளாய்வுக்கட்டுரைகள் மலர, மலர்ந்து மணம்பரப்பச் செய்கிறார். அதன் பயனாய் மலர்ந்தவற்றுள் ''கம்பனில் தாவரங்கள்'' எனப்பெயரிய இது நறுமணம் வீசும் புதுமலர். மொழி வளத்திற்கு மட்டுமின்றி அறிவு வளர்ச்சிக்கும் பெருந்துணை புரிவன இத்தகைய ஆய்வு நூல்கள்.

இப் பொருளாய்வுக் கட்டுரையைப் படைத்தவர், எம்.ஏ. வகுப்பு மாணாக்கியரான செல்வி கி.மோகனகுமாரி ஆவார்-மிக்க ஆர்வத்தோடும், ஈடுபாட்டோடும் நூல் முழுதும் நுழைந்து பலவற்றையும் தேடித் தொகுத்து, துருவி ஆராய்ந்து, தேர்ந்து தெளிந்து வகுத்துக் கோத்திருக்கிறார். நவீன விஞ்ஞான நெறிப்படி பாகுபாடு செய்து விளக்கம் தந்து நூலைச் செம்மையுடையதாக ஆக்கியுள்ளார்.

தாவரங்களை எல்லாம் முதலில், **'பூக்கும் தாவரம்'**, **'பூவாத்தாவரம்'** என இரு வகைப்படுத்திக் கொள்கிறார். பூக்கும் தாவரங்களை **'மூடுவிதைத்தாவரம்'**, **'மூடாவிதைத்தாவரம்'** என்று இரு பிரிவினவாய்ப் பகுத்துக் கொள்கிறார். மூடுவிதைத்தாவரங்களை **'இரட்டை விதையிலைத்தாவரம்'** **'ஒற்றை விதையிலைத்தாவரம்'** என்ற உட்பிரிவுகள் இரண்டனுள் அடக்கி வைக்கிறார். அங்ஙனமே, பூவாத் தாவரங்களை **'பாசி'**, **'காளான்'** என்று இரு பிரிவினவாய் வகுத்துக்கொள்கிறார்.

இங்ஙனம் இனம், பிரிவு, உட்பிரிவு முதலியவற்றைச் செவ்விதின் கணித்து வகுத்துக் கொண்ட பின்னர் அவ்வற்றைப் பற்றி நூலின் துணைக் கொண்டும், பிற ஆசிரியன்மார்கள் உதவி கொண்டும் பொருளாய்வு புரியத் தொடங்கியுள்ளார். ஆய்ந்து கண்டவற்றைத் தெளிவாக எடுத்துரைக்கிறார். படிப்போர்க்கு அலுப்புத் தட்டாத முறையில் சுவைமிக்க கட்டுரையாக அமைந்திருப்பது இதன் சிறப்பாகும். கம்பனை-அவன் காட்டும் பொருள்களை -நாம் காண்பதுடன் துய்க்கவும் ஏற்ற முறையில், சங்கப்புலவர்கள் முதல் பிற்கால அவ்வை உள்படப் பல்லோர் பாடல்களையும் எடுத்துக்காட்டி விளக்கம் தருவது நூலின் சிறப்பையும் பயனையும் மிகுத்து நிற்கிறது.

அனைத்துள்ளும் "காந்தள்" என்னும் தலைப்பில் இவர் எழுதியுள்ள கட்டுரை அருமையாக உள்ளது. தெளிவும், வளமும் பெற்றுப் படிப்போர்க்கு அளவிலா இன்பம் பயப்பதாய் அமைந்திருக்கிறது. அங்ஙனமே "தாமரை" என்னும் கட்டுரையும் செவ்வி நனி பெற்றுத் திகழ்கிறது.

காந்தட்பூவை, தமிழ் இலக்கியங்கள் கூறுமாப்போல, "தோன்றிப்பூ" என்றே மலையாள மக்கள் வழங்குகிறார்கள்,

என்பதிலே கட்டுரையாளர் பெருமகிழ்வு கொள்ளுகிறார். இது மட்டுமல்ல, இன்னும் ஏராளமான நற்றமிழ்ச் சொற்கள் அங்கு நாளும் பயிலப்படுவதை என்னினும் கட்டுரையாளர் நன்கறியக் கூடும்.

எங்கள் பகுதியில் காந்தளை, "**கார்த்திகைப்பூ**" என்றே வழங்குவர். கார்த்திகை மாதத்தை ஒட்டி மலர்வதாலோ , விரல்கள் போன்ற அழகிய ஆறு இதழ்கள் உடைமையாலோ, அல்லது கார்காலமாகிய பெண் (கார்த்தி)ணின் கைம் மலர் என்ற பொருள் கற்பித்தோ இங்ஙனம் பெயர் சூட்டி மகிழ்ந்தனர் போலும்! அன்றியும் வெண்காந்தளைக் காந்துகம், கோடல், கோடை என்றும், செங்காந்தளை இலாங்கலி, தோன்றி, பற்றை என்றும் இனம் பிரித்துக் கூறப்படுவதை, நிகண்டு, அகராதிகளில் காணலாம்.

நூலுள் சென்று அதன் அருமைகளையும் பெருமைகளையும் அறிந்து மகிழ்வது மட்டும் போதுமா? குறைகளையும் கண்டு அவற்றைக் களையும் வழியிலும் பணி புரிவதன்றோ மெய்யன்பர்க்குரிய கடன்? எனவே அந்தப் பணிக்கு விரையுமுன் ஒரு வரையரையை உரக்கச் சிந்திக்கலாம்.

கம்பன் சொல்லின் செல்வன்; கவி: மகாகவி; கவிச்சக்கரவர்த்தி; கலைஞன்; நாடகக் கலைவலான்: பெருங்காப்பியம் படைத்த பெரும்புலவன். ஆம்! அனைத்தும் மெய்யே! ஆனால் பொருளாய்வு செய்யும் பொழுது மறவாமல் நம் நினைவில் பதித்துக் கொள்ள வேண்டுவது "**கல்வியில் பெரியன் கம்பன்**" என்ற ஒன்றே ஒன்றைத்தான்! கம்பன் பித்தால் நான் பேசவில்லை; அவனருளால் அவனை-அவன் படைப்பை-அவற்றின் மெய்ந்நிலையை அறிய முயன்று கொண்டிருக்கும் ஓர் எளிய மானாக்கன் என்ற முறையிலேயே இதைச் சொல்லுகிறேன்.

ஆய, ஆய, அவன் பெருமை அளப்பரிதாய்த் தோன்றுகிறது. ஆம்: இஃது உண்மை: வெறும் புகழ்ச்சி இல்லை!

**இல்லாத உலகத்து எங்கும்-**
**இவன் இசைகள் கூரக்**
**கல்லாத கலையும் வேதக்**
**கடலுமே! என்னும் காட்சி**

யானறிந்தவரை கம்பனிடத்திலேதான் காணக் கிடக்கிறது.

இதை மனத்தில் கொண்டு, எவ்வித விருப்பு-வெறுப்புமின்றிக் கம்பனை ஆயப் புகவேண்டும். அங்ஙனம் ஆயப் புகுங்கால் அவனே அறிவு ஒக்க நின்று கைகாட்டி வழிநடத்திச் செல்கிறான். விஞ்ஞானக் கருத்துக்கள் வந்து மோதும்போதும் சரி, உரையாசிரியர்கள் கருத்துவந்து முரணும் போதும் சரி, உடனே நாம் ஒரு முடிவுக்கும் வந்துவிடப்படாது. அனைத்தையும் அலசிப்பார்க்க வேண்டும். தேவையானால் வேறு வழியின்றேல் பொருளை, இருக்கும் இடம் தேடிச் சென்று, நேரில் கண்டு தெளிய வேண்டும். கம்பன் உள்பட எவரையும், எதையும், அப்படியே நம்பி ஏற்றுக்கொள்ளாமல் பல்லாற்றானும் சோதித்துத் தெளிவு பெறல் ஆராய்ச்சியாளரின் தவிர்க்க ஒண்ணாக் கடமை. தனிப் பெரும் உரிமையும் கூட.

எதை ஆய்கிறோமோ அதில் காணப்படுகின்றனவற்றைத் தவறு, பிழை, வழு, என்று எளிதில் முடிவு செய்துவிடப் படாது. அதற்காக, குற்றம் குறைகள் இருந்தால் அவற்றை மூடி மறைத்துப் பூசி மெழுகி

விடவேண்டுமென்று சொல்லவில்லை., சொல்லவும் மாட்டேன்.

கம்பனைப் போன்ற கல்வியில் பெரிய ஒரு மாமேதையை ஆயும் போது ஏன் இப்படி மொழிகிறான். அதில் உள்ள சிறப்பு என்ன? தவறானால் என்ன காரணம்? என்ற முறையில் ஆராய வேண்டும். அதே காலத்தில் எவரை, எதை ஆராய்கிறோமோ அதில், அவர் மாட்டு அன்பும் பரிவும் கொண்டு செயல்பட வேண்டும். நிச்சயமாகத் தவறு என்று தெளியும்வரை அவரை நாம் கைவிடப்படாது. அறிவும்-நேர்மையும் இரு கரையாய் அமைய ஆராய்ச்சி என்னும் நன்னீர் ஆறு தன்வழி ஒழுக வேண்டும். அப்பொழுது தான் பயன் சிறக்கும் இல்லையா?

இனி நூலுள் நுழையலாம். 'அகில் இருண்ட நிறமுடையது என்பதைக் 'காரகில்' என்று கூறுவதிலிருந்து ..... உணர முடிகிறது' என்கிறார் ஆசிரியர் அகில் இருவகைப்படும் ஒன்று காரகில்., மற்றையது வெள்ளகில். புகைக்க மணம் தருவது காரகில்., அரைக்க மணம் தருவது வெள்ளகில். சந்தனம் போல் வெண்மையாய் இருப்பதால் சந்தனத்தில் கலந்து நிறம் பெறுவதைப் போல அகில் தேய்விலும் குங்குமப்பூ கலக்கப் பெறும் என்று கம்பன் பேசுவான்.

**'............. நானமும், நறும் குங்குமம்**
**செறி அகில் தேய்வையும்'(பா.கா)**

எனவே அகில் கரு நிறமுடையதே என்று ஒரு வழியாய் முடிவுகட்டலாகாது.

'காவி, கருங்குவளை, நெய்தல், நீலோற்பலம், பானல் என்பவை ஒரு மலரா அல்லது வெவ்வேறு மலர்களா என்பது பற்றி ஐயம் எழுகிறது.

**''காவியும் கருங்குவளையும்**
**நெய்தலும் காயாம்**
**பூவையும் பொருவுவா னவன்'**
**"படர் பூங் குவளை நாண் மலரோ,**
**நீலோற்பலமோ, பானலோ"**

என்ற பகுதிகளை நோக்கும் போது இவை வெவ்வேறு மலர்கள் என்று எண்ணத் தோன்றுகிறது. ஆனால் இவை எந்த நிலையில் வேறுபடுகின்றன என்பதற்குக் குறிப்புகள் இல்லை.

உரையாசிரியர்கள் இவையனைத்தும் ஒன்றையே குறிக்கின்றன என்ற முறையிலேயே உரையெழுதிச் செல்கிறார்கள் என்று கூறி நச்சினார்க்கினியர், உ.வே.சா, வை.மு.கோ. முதலியவர்களின் உரைப் பகுதியைச் சான்று காட்டுவதுடன் "சங்க இலக்கியங்களில் செடி கொடி விளக்கம்" என்ற ஆய்வு நூல் ஆக்கிய திரு.சாமியின் கருத்தையும் எடுத்துக்காட்டி, முடிவில்,

'எனவே இவை வெவ்வேறு செடிகள் என்று எண்ணும் முறையில் கம்பர் கூறியிருப்பதுஏன் என்று விளங்கவில்லை என்று தம் முடிவை ஐய நிலையில் ஐயமறக் கூறுகிறார்.

அல்லி வகையில், அல்லி முதல் பானல் வரை கொண்ட பெயர்கள் பதின்மூன்றில் உற்பலம், குமுதம், குவலயம், நீலோற்பலம் ஆகிய நான்கும் சமஸ்கிருதச் சொற்கள். கிழங்கில் தோன்றுவது என்னும் பொருள் தருவது உற்பலம். குமுதம் என்பது ஆம்பல் குவலயம் என்பது குவளை: நீலோற்பலம் என்பது நீல மலராகும். எனவே எஞ்சிய ஒன்பதையே நாம் ஆய வேண்டும்.

அல்லி என்பது இனத்தின் பொதுப் பெயர். தாமரையையும் குறிக்கும் அரத்தம்

என்பது செவ்வல்லி: ஆம்பல் என்பது வெள்ளல்லி: நீலம் என்பது நீல அல்லி: எனவேதான் சேதாம்பல், அரக்காம்பல், செங்குமுதம் என்றெல்லாம் அடைகூட்டி முன்னையோர் குறிக்கலாயினர்.

கழு நீர் அல்லது செங்கழுநீர் மலரை ஒருவாறு அல்லி இனமாய்க் கருதலாம் போலத் தோன்றினும் அது பல்லாற்றானும் அல்லியினின்றும் வேறுபட்டது. அதன் நாளத்தின் நீளம் மூன்றடிக்கு மேற்படாதது. மணம், நிறம், அளவு, அமைதி, தோற்றம் ஆகிய எல்லா வகையாலும் நீலம் அல்லது நீலோற்பலத்தினின்றும் வேறுபாடுடையது. இன்றும் திருவாரூர் போன்ற சில பெருங் கோயில்களில் நாள் தோறும் வழிபாட்டில் பயன்படுத்தப் பெறுவது. அதன் நிறம் சுத்த நீலமன்று. ஊதா விரவிய நீல நிறம் (Puplish Blue) அல்லி, தாமரைகளைப் போல ஆழமிக்க நீர் நிலைகளில் கழுநீர் உற்பத்தி ஆகமாட்டாது. வளர, வாழ முடியாது. மூன்றடி ஆழத்திற்கு உட்பட்ட சேற்றுப்பாங்கான குட்டைகளில் மட்டுமே இதைக் காண முடியும். இந்தத் தன்மையை எல்லாம் தெள்ளத் தெளிந்தவன் ஆனதாலேயே கம்பன்

**“மேதிக் குழி எலாம் கழுநீர்க் கொள்ளை”**

என்று செவ்விதின் மொழிந்து செல்கிறான். பொய்கை, தடம், தடாகம், கேணி முதலியவற்றைக் கூறமல் “மேதிக் குழி” என்று அவன் கூறுவதை நயம் தெரிந்து பொருள் கண்டு மகிழவேண்டும்.

‘‘காவி’’ என்பது கருங்குவளை. மணிவாசகர் இதைப் “பைங்குவளைக் கார் மலர்” என்பர். இருண்ட நீல நிறமுடையது. அடி திரண்டும், கழுத்து நெருங்கியும், வாய் அகன்றும் குவளை மலர், செவ்வரி ஓடிய வெளிர் நீல நிறமுடையது. அதன் தோற்றத்தை-அமைதியை-அடிப்படையாகக் கொண்டு அமைத்த காரணத்தாலேயே நீரருந்தும் "டம்ளர்" குவளை எனப் பெயர் பெற்றது.

நெய்தல் என்பது பெரும்பாலும் கடற்கரைப் பகுதியில் காணப்படும் கரு நீல மலர். பானல் என்பதைப் பெரும்பாலும் மருத நிலப் பகுதியில் வாய்க்கால்களிலும், குளக்கரைகளிலும் காணலாம். நிறம் நீலமே. ஆயினும், உருவும், அளவும், அமைதியும் முற்றும் தனித்தன்மை கொண்டது.

நம்முடைய வணக்கத்திற்கும் நன்றிக்கும் உரிய பழைய உரையாசிரியர்கள் நூலறிவும்-நுண்ணறிவும் துணையாகக் கொண்டு கூறுவதையும், நவீன விஞ்ஞான நெறியில் தாவர இயலார் பிறநாட்டுத் தாவரங்களையே அடிப்படையாகக் கொண்டு வகைப்படுத்தி வரையறை செய்வதையும் புரிந்துகொண்டு அவர்கட்கெல்லாம் மரியாதையுடன் ஒரு கும்பிடு போட்டுவிட்டு இவையனைத்தும் ஒன்றுக்கு ஒன்று வேறுபட்டவையே என்பதை நாம் கண்மெய்யாக (பிரத்தியட்சமாக) காணலாம். எனவே ஆராய்ச்சியாளர் திரு.சாமி கருதுவது போல் “நெய்தல் செடியையே நீலோற்பலம், நீலம், கருநெய்தல், கருங்குவளை, பானல் என்று பல பெயரால் மயங்கிக் கூறுவர்” என்பதை நாம் ஒப்புக் கொள்ள முடியவில்லை.

காயாம்பூ இராமன் மேனியழகிற்கு அமைந்த சிறந்த உவமையாகும். கொம்பு முழுவதும் அடர்ந்து செறிந்து மலர்ந்து பொலியும் வளப்பைக் காணும் நமக்குக் கூட மயிற் கழுத்தே நினைவுக்கு வரும். பூவைக் கையில் உதிர்த்துக் காணும் பொழுதுதான் உவமை நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும். மிளகளவேயுள்ள இப் பூவின் புறத் தோற்றம்

ஒள்ளிய முதிர் நீல நிறமுடையது. அகப்பகுதி ஆங்காங்கே இனிய சிவப்பு நிறம் அமைந்து மனத்தை ஈர்த்து நிற்கும். கண்ணும் வாயும், கையும் திருவடியும் சிவந்த கார்முகில் வண்ணனுக்குப் பொருத்தமான உவமை காயா நறும் போதே என்பது நமக்கும் கூட நன்கு புலப்படும்.

1941ல் ரசிக மணி அவர்கள் காரைக்குடி வந்து ஒரு வாரம் தமிழ் விதைத்தார்கள். ஒரு நாள் "புயல் இவன் மேனி என்பார்: பூவையே பொருவுமென்பார்" என்ற அடியைக் கூறி அழகை வியந்துகொண்டிருந்தார்கள். "முன்னதற்குப் பின்னது மறுப்பு" என்றேன் நான். எப்படி? என்றார்கள். பக்கத்திலிருந்து காயாஞ் செடியிலிருந்து ஒரு கொம்பை ஒடித்து வந்து காட்டினேன். சிவப்புப் புள்ளிகள் அகத்திருக்கப் புறத்தே நீலம் பூத்தொளிரும் அழகைக் கண்டு பேரின்பத்துள் மூழ்கி "என்னே அருமை! என்னே அருமை: புயல் ஒருபுடையுவமைதான். பூவை தான் சரியான உவமை. இன்று தானே காயா மலரை-பூவையை-நான் காணுகிறேன்: கம்பன் எப்படி எல்லாம் இயற்கையை அனுபவித் திருக்கிறான் என்பது இப்பொழுதல்லவா புரிகிறது: என்று வாயூறி அன்று முழுதும் அதையே எண்ணி எண்ணி இறும்பூ தெய்தினார்கள்.

கொன்றையில் பலவகையுண்டு. கடுக்கை, இதழி பொன்னிதழி-, சரக்கொன்றை, பெருங்கொன்றை, பிரணவக்கொன்றை, செங்கொன்றை, புலிநகக் கொன்றை என்று பற்பல பெயர் கொண்டு விளங்குகிறது இது. புலிநகக்கொன்றை ஞாழல் எனப் பெயர் பெறும். இவை இனத்தால் ஒன்றே ஆயினும் தோற்றம் முதலியவற்றால் வேறுபட்டவை என்பதைப் பெயர்களே புலப்படுத்திக் கொண்டிருக்கவில்லையா?

'கிஞ்சுபம்' என்பதை எட்டி அல்லது காஞ்சி மரம் (Strychuos Nux-vomica) என்பதாகக் கொண்டிருப்பது வியப்பாக உள்ளது. பல்வேறு நிகண்டுகளிலும் இப்பெயர் காணப்படவில்லை. அன்றியும் "கிஞ்சுவ மரத்திடை" என்ற பொருந்தாப் பாடத்தை ஏற்றுக்கொண்டிருக்கிறார். "மரத்தடி" என்றாலும் பொருள் உண்டு. "மரத்திடை" என்பது வழுவன்றோ? மிகப் பெரும்பாலான சுவடிகளிலும், அச்சுப்பதிப்புகளிலும் "கிஞ்சுப வனத்திடை" என்ற பாடமே காணப்படுகிறது. பொருத்தமான நல்ல பாடமும் இதுவே! கிஞ்சுபம் என்ற சொல் அசோகைத்தான் குறிக்கிறது, என்று கொள்ளவேண்டும். இருந்திருந்து இராவணன் சீதையை எட்டி மரத்தடியிலா சிறை வைத்திருப்பான்? சிந்திக்க வேண்டும்.

"சிந்து" என்பது புளியைக் குறிக்கும் சொல். நிகண்டுகள் சிந்து, சிந்தம், சிந்தகம் என்ற சொற்களால் புளியைக் குறிக்கின்றன. "இப்பெயர் "சிஞ்சா" என்ற வட சொல்லின் திரிபாகும்" என்று முடிவுகட்டுவது எளிதல்ல. தெலுங்கில் "சிந்தம்" என்ற சொல்லே புளியைக்குறிக்கிறது. சிந்தம்+ பண்டு சிந்தப்பண்டு என்று அன்றாட வழக்கிலும் பயிலப்பெறுகின்றது.

மேலும், சமஸ்கிருதத்திலிருந்து தான் பல்வேறு சொற்களும் தமிழுக்கு வந்தன எனக்கருதல் அறனன்று. நான் சமஸ்கிருதத்தை வெறுப்பவனல்லன்., மதிப்பவன்., போற்றுபவன், சமஸ்கிருதம் எக்காலத்தும் பேச்சு வழக்கில் இருந்ததில்லை. அது இயல்பான மொழியுமல்ல. எல்லார்க்கும் பொருந்த அமைக்கப்பட்டது என்ற உண்மையைச் 'சமஸ்கிருதம்' என்ற அதன் பெயரே நன்கு புலப்படுத்திக் கொண்டிருக்கிறது. சமஸ்கிருதம் இயல்பாகத்

தோன்றி வளரும் ஒரு 'மொழி' அல்ல. ஆனதால் பொதுவான பல சொற்களும் பல்வேறு மொழிகளிலிருந்து-குறிப்பாக தமிழிலிருந்து-கொண்டவை.

எனவே சம்ஸ்கிருதத்தில் காணப்படும் சொற்கள் யாவும் சம்ஸ்கிருதச் சொற்கள் என்றும், தமிழிற் காணப்படும் அச்சொற்கள் சம்ஸ்கிருதத்தினின்றும் தமிழுக்கு திரிந்தோ, திரியாமலோ வந்தவை என்றும் முடிவு கட்டுதல் முறையன்று. பெரும்பாலான கலைச்சொற்கள் அறிஞர்களால் சம்ஸ்கிருதத்தில் ஆக்கப்பட்டவை. அவை தமிழுக்கு அங்கிருந்து வந்தவை என்று கூறினால் நியாயம். உலக வழக்கில் பன்னெடுங்காலமாகப் பயின்று வரும் ஒரு மொழியில் காணப்படுவதும், அன்றாட வாழ்வுக்கு இன்றியமையாத பொருட் பெயராகவும் உள்ள சொல் வேறெங்கிருந்தோ வந்தது எனக் கொள்ளலும், சொல்லலும் நெறியன்று.

'சிந்து' என்பது இயற்பெயராகவும், 'புளி' என்பது வேர், முதல் பழம் வரையுள்ள எல்லா உறுப்புகளின் சுவை காரணமாகத் தோன்றிய பண்புப் பெயராகவும் கொள்ளப் படவேண்டு மென்பதே என் கருத்து.

நொச்சி என்பதும் சிந்து வாரம் என்பதும் ஒன்றே என்று கருதுகிறார் ஆசிரியர். நொச்சி என்பது. சிறு மரமாய் வளர்வது. மூவிலைக் கூட்டிணுக்காகவும், ஐந்திலைக் கூட்டிணுக்காகவும் காணப்படும். அஞ்சிலை நொச்சி, மூவிலை நொச்சி என்று அதையும் பிரித்துப் பேசுவர். அவை இரண்டும் முற்றிலும் ஒத்த ஓரினமே! இதன் நிறம் காம்பும், கொம்பும், இலையும் சாம்பல் பூத்த வெளிர் பச்சையாக இருக்கும். சிந்து வாரம் என்பது 'கருநொச்சி' என வழங்குகிறது. நொச்சியினின்றும் இது எல்லாவகையாலும் வேறுபட்டது. தண்டும், காம்பும், இலைநரம்பும் ஊதா முதிர்ந்த ஒளிர் கருமையுடையவை. இலை முதிர் பசுமை கொண்டு கூர்மையுடையதாய் மேல்நோக்கி நிற்கும். ஆகவே இரண்டையும் வேறுவேறாய் கொள்வதே சரி.

புன்னையும், சுரபுன்னையும் வேறுவேறாய் கொண்ட ஆசிரியர் நாகம் என்பது சுரபுன்னையே எனத் துணிகிறார். புன்னையுடன் ஒரளவு ஒத்திருக்கும் சுரபுன்னையை வேறாக்கிய ஆசிரியர் எவ்வாற்றானும் ஒற்றுமை காணப்படாத நாகத்தைச் சுரபுன்னையின் மறுபெயராகக் கொண்டமையாலேயே ஒன்றென ஊகித்திருக்கவேண்டும். சுரபுன்னைகடற் கரையை ஒட்டிய வெம்மை மிகுந்த மணற்பாங்கிலும், பாலைநிலம் போன்ற வறண்ட நிலப்பகுதியிலும் வளர்வது. நாகம் என்பது மாமரம் போல அடிபெருத்து வானுற ஓங்கி வளர்ந்து காணப்படும். தற்பொழுது 'நாகதாளி' 'நாகலிங்கம்' எனச் சொல்லப்படும் அடிமரத்தை ஒட்டி மலர் தோன்றும். சிவப்பும், மஞ்சளும், வெண்மையும் கொண்ட, தடித்த இதழ்களுடன் கூடியவை இதன் மலர்கள். நூற்றுக்கணக்கான சிறு முளைகள் சிலலிங்கம் போல மலரின் அடிப்பாகத்தில் காணப்படும். குடைகவித்தாற்போல நாகபடம் மலரடியிலிருந்து எழும்பி மேலே வளைந்து கவிந்திருக்கும். எனவே இரண்டும் ஒன்றிற்கொன்று முற்றிலும் மாறுபட்ட மரங்களே.

''மானைக்கொடி'' என்ற பெயர் தற்பொழுது எந்தத் தாவரத்தைக் குறிக்கிறது என்று தெரியவில்லை என்கிறார் நேர்மையான ஆசிரியர். இதை எங்கள் பகுதியில் காணலாம். மாணாகொடி, ஊணாங்கொடி என்பர் இதனை. இன்றும் ஆண்டுதோறும் காரைக்குடித்தேர்

இக்கொடி கொண்டே கட்டப்படுகிறது.

'வள்ளிகாடி' பற்றி ஆராயும்போது நிலத்தில் படரும் இக்கொடியைக் கம்பர் மரத்தில் சுற்றி வளர்வதாகக் காட்டுகிறார் என்று எழுதுகிறார்.

**'வள்ளிபுடை சுற்றி உயர் மரம்'.**

என்ற இடத்தில் வள்ளி என்னும் சொல் பொதுவாக கொடி அல்லது பூங்கொடியையே குறிக்கிறது. எனவே வள்ளிக்கொடி என்று பொருள்கோடல் சரியன்று. சேனை, கருணை, சேம்பு முதலிய உண்ணும் கிழங்கு வகையைப் போலச் செடிக்கிழங்காய் இல்லாமல் கொடியின் கிழங்காய் இருப்பதால் தான் இதை வள்ளிக்கிழங்கென்றனர் பண்டையோர். இன்றும் எங்கள் பகுதியில் வள்ளி பயிரிடப்படுகிறது. வெற்றிலை போன்ற இலையையுடையது. உண்ணச் சுவை மிக்கது. நார் இல்லாதது. மார்கழி-தை மாதங்களில் கிழங்கு கல்லி எடுக்கப்படும். மரத்தில் படரக்கூடுமாயினும் படர விடுவதில்லை. காரணம் மரத்திற்கு அப்பால், கல்லி எடுக்க வசதியாக, வேர்கள் ஓடாத நிலத்தில், பயிரிடப்படுவதே. இதில் இருவகையுண்டு. ஒன்று நல்வெள்ளை. மற்றது இளஞ்சிவப்பு. இரண்டின் தோலும் ஒரே மாதிரி கருப்பாய் (பன்றித்தோல் போல்) வேரரும்பிக் காணப்படும்.

சர்க்கரைவள்ளி என்பது இதனின்றும் முற்றிலும் மாறுபட்டது. தோல் சிவப்பாகவும், வெள்ளையாகவும் இருவகை உள்ளதேனும் கிழங்கின் சுவையும் தோற்றமும் ஒன்றே. இரண்டிலும் நார் உண்டு. இது சீனிக்கிழங்கு என்றும் பெயர் பெறும். இதுதான் ஆங்கிலத்தில் Sweet potatoes எனப்படுவது.

இவையன்றி மூன்றாவது வகை ஒன்றுண்டு. அதை மரவள்ளி, ஏழிலைவள்ளி, குச்சிக்கிழங்கு என்ற பெயர்களால் குறிப்பர். ஆங்கிலத்தில் Topioca என்பர். இவையில்லாமல் சிறுவள்ளி, நீர்வள்ளி போன்ற வகைகளும் உண்டு.

இன்னும் எத்தனை எத்தனையோ சொற்கட்கு அரிய விளக்கம் தருவதுடன் சிந்திக்கவும் செய்யும் அருமையான பொருளாய்வுக் கட்டுரையை ஆக்கி அளித்த செல்வி.கி. மோகனகுமாரியின் ஆர்வத்தை எவ்வளவு பாராட்டினும் தகும். அரிதின் முயன்று அனைத்தையும் ஆராய்ந்து சீரிய முறையில் தெவிட்டாத மொழியில் நூலைப் படைத்துள்ளார். இங்ஙனம் மாணாக்கப் பருவத்திலேயே மாண்புடைப்பணியை மேற்கொள்ளச் செய்து வழி நடத்திச் செல்லும் துறைத்தலைவரை நல்லோரும், நாடும் நனி பாராட்டி வாழ்த்தும். அங்ஙனம் வாழ்த்துவோர் திருக்கூட்டத்தில் அடியவனும் ஒருவனாய் நின்று, 'பல்கலைக் கழகமும், தமிழ்த்துறையும், தமிழ் ஆசிரியப் பெருமக்களும், மாணாக்கர்களும் நிறை வாழ்வு வாழ்ந்து நெடும் புகழ் சூடி மகிழ்க: என்று மனமார, வாய்மணக்க வாழ்த்தியும் நன்றிசெலுத்தியும் அமைகிறேன்.

15-05-1969.

அன்பன்,

சா. கணேசன்

  

சா. கணேசன்
SAW. GANESAN

Reply

PHONE No.
KARPAKANILAYAM
KARAIKUDI, (S.I.R.)

20. 12. '51

எங்கள் ஐயா டி.கே.சி
அவர்களுக்கு. வணக்கம்;
தங்கள் அன்பார்ந்த கடிதம்.
'வா' எனப் பணித்தால் மாற்றம்
என்ன இருக்க முடியும்? சரி.
வருகிறேன். என்பதுதான்
என் பதில். தங்கள் ஆணைப்
படியே கிட்டத்தட்ட ஒரு
வாரம் முன்னதாக இவ
வந்து சேர்ந்து விடுகிறேன்.
வந்து என்னென்ன வேலைகள்
முடியுமோ அவ்வளவையும்
பொறுப்பேற்று நடத்துவேன்,
நண்பர் [illegible] துணையுடன்.
வேறென்ன வேண்டுவேன்?
என்றும் தங்கள் பணி தலை
மேற்கொண்ட

சா. கணேசன்

33

# கம்ப ராமாயணம்

- தொ.மு.பா.

மனிதனுக்குப் பொதுவாக வாழ்க்கையிலே இன்பம் தருவது எது என்று கேட்டால், உயர்ந்த காவியங்களைப் படித்து, அக் காவியங்களிலுள்ள கவிச்சுவையை அனுபவிப்பதுதான் என்று லேசாகச் சொல்லி விடலாம். ஆத்ம அனுபவத்துக்கு அடுத்த படியாகக் கவிதை அனுபவம்தான் மனிதனுக்கு ஆனந்தம் தரக்கூடியது. தமிழன் இத்தகைய கவிதை அனுபவம் பெறவேண்டுமானால், அவன் அதை யாரிடம் எதிர் பார்க்கலாம்? கம்பனிடம்தான் எதிர்பார்க்க முடியுமே யொழிய வேறு புலவர்களிடம் எதிர்பார்க்க முடியாது.

**இம்பர் நாட்டில் செல்வம் எலாம்**
**எய்தி அரசாண்டு இருந்தாலும்,**
**உம்பர் நாட்டில் கற்பகக் கா**
**ஒங்கும் நீழல் இருந்தாலும்,**
**செம்பொன் மேரு அனைய புயம்**
**திறல் சேர் இராமன் திருக் கதையில்**
**கம்பநாடன் கவிதையில் போல்**
**கற்றோர்க்கு இதயம் களியாதே!**

என்றெல்லாம் தெரியாமலா பாடிவைத்தார்கள்!

'கல்வியில் பெரியவன் கம்பன்', 'கவிச் சக்கரவர்த்தி கம்பன்' என்றெல்லாம் நமது முன்னோர்கள் அவனைப் போற்றி உரைத்திருக்கிறார்கள். ஆனாலும், கம்பன் யார் என்று நாமெல்லோரும் தெரிந்து கொண்டோமா என்றால், இல்லை என்றுதான் சொல்லவேண்டும். காரணம், சாதி மத பேதங்களால் பிளவுண்டு கிடக்கும் தமிழர்களிடையே அவன் பிறந்து விட்டான். அவனுடைய கவியை மட்டும் படித்துக் படித்துச் சுவைக்கிறவர்கள், அவன் ஓர் உலக மகாகவி, சாதி சமயம் முதலிய வேறுபாடுகளுக்கு எல்லாம் அப்பாற்பட்டவன், ஒரு பெரிய மேதாவி, ஏதோ தமிழர் பெற்ற அதிருஷ்டம்தான் அவன் தமிழனாய்ப் பிறந்தான், தமிழிலே இக் கவிதைக் களஞ்சியத்தை எழுதி உதவினான் என்று கண்டுகொள்ளலாம். 'பூர்வீக கிரேக்கருக்கு ஹோமர் எப்படியோ, ரோமருக்கு வர்ஜில்

காரைக்குடிக் கம்பன் கழகத்தின் முதல் வெளியீடு என்ற குறிப்புடன் கம்பனுடைய பால காண்டப் பாடல்களில் நூறு பாடல்களைத் தொ.மு. பாஸ்கரத் தொண்டைமான் அவர்களைக் கொண்டு சிறு விளக்கவுரையுடன் "சீதாகல்யாணம்" என்ற பெயரில் நூலாகக் கம்பன் அடிப் பொடியார் வெளியிட்டிருக்கிறார்கள்.

அதில் தொ.மு.பா. எழுதிய கம்பராமாயணம் என்ற முன்னுரையையும் இராமாயணக் கதைச் சுருக்கத்தையும் இங்கே வெளியிடுவதில் பெருமையடைகிறோம். விஷுவருசம் வெளியிட்ட நூல் இது. இளைஞர் யாவரும் எளிதில் புரிந்து கொள்ள வேண்டுமென்ற பேரவாவினால் அன்றே சந்திபிரித்து வெளியிட்டுள்ளது பாராட்டத் தக்க முயற்சியன்றோ?

எப்படியோ, இத்தாலியருக்குத் தாந்தே எப்படியோ, ஆங்கிலேயருக்கு ஷேக்ஸ் பியரும் மில்டனும் எப்படியோ, வடமொழி யாளருக்கு வால்மீகி எப்படியோ, அப்படியே தமிழருக்கும் தமிழுக்கும் கம்பன் பெருமை கொடுக்கிறான்.'

கம்பனது சரித்திரம் ஒன்றும் திட்டமாக நமக்குக் கிடைக்கவில்லை. அவன் திருவழுந்தூரில் இன்றைக்கு சுமார் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் பிறந்தவன் என்றும், வெண்ணெய் நல்லூர் சடையப்ப வள்ளலாரது ஆதரவில் வளர்ந்து, அவர் விரும்பியபடியே இந்த ராமாயணத்தைப் பாடி முடித்தான் என்றும் தெரிகிறது. இத்தகைய ஒரு பெரிய காவியம் எழுதுவதற்கு அவனுக்குக் கலைமகளது பரிபூரணமான அருளும், சடையப்பரது கருணையால் கிடைத்த இலக்கிய அறிவும் பெரிதும் துணை நின்றிருக்கின்றன. கம்பனைப் பற்றி நாம் இவ்வளவு தெரிந்துகொண்டால் போதும்.

இராம கதை வடமொழிப் புலவரான வால்மீக முனிவரால் உலகுக்குக் கொடுக்கப்பட்ட ஒரு பொக்கிஷம். அக் கதை, மக்கள் வாழ்க்கையைப் பண்படுத்த ஒரு நல்ல சாதனம் என்று கண்ட கம்பன், அதைத் தமிழில் விருத்தப் பாவிலே ஆக்கிக் கொடுத் திருக்கிறான். கம்பன் தனது இராம கதையில் வால்மீகியை மிகவும் நெருக்கமாகவே பின்பற்றி யிருக்கிறான் என்றாலும், இந்தக் கம்பராமாயணம் வால்மீகி ராமாயணத்தின் மொழி பெயர்ப்பு என்று சொல்ல முடியாது. 'கதை சொல்லும் ரீதியும், வாக்கின் நடையும், வர்ணனைகளும் அலங்காரங்களும், மனித உள்ளத்தின் உணர்ச்சிகளை எடுத்துச் சொல்லும் மாதிரியும் எல்லாம் கம்ப னுடையதே.' கதையை மட்டும் வால்மீகி யிடமிருந்து பெற்றுக்கொண்டு, அவன் ஒரு தனிக் காவியமாகவே செய்திருக்கிறான் என்று தான் சொல்லவேண்டும்.

கம்பனுடைய கவிகள் எல்லாம் திராக்ஷாபாக மாகவே அமைந்திருக்கின்றன. கம்பன் பாட்டுக்கள் என்றாலே அதற்கு ஒரு தனி நடை இருக்கும். ஓர் இனிமையும், ஓர் எளிமையும் இருக்கும். இன்று நம்மிடையே உலவிவரும் கம்பராமாயணம் என்ற புத்தகத்தில் பல பாட்டுக்கள் இடைச் செருகல்கள் என்று அறிஞர்கள் கூறுகிறார்கள். அந்த இடைச் செருகல்களை யெல்லாம் ஒதுக்கித் தள்ளிவிட்டு, கம்பன் பாட்டுக்கள் என்று சொல்லக்கூடிய பாட்டுக்களை மட்டும் படித்தால், நமக்கு ஒரு தனி ஆனந்தமே உண்டாகும். கம்பன் கவி ஒவ்வொன்றிலும் இருக்கிறது அவன் முத்திரை.

'கம்பனுடைய கவிதையைப் பற்றி ஒரே வார்த்தையில் வர்ணிக்க வேண்டுமானால் அதன் சிறந்த குணம் காம்பீர்யம் என்று சொல்லலாம். கம்பன் சிருங்காரத்தை அழகாகச் சொல்லுகிறான் என்பதில் தடையில்லை. சோகம் சொல்லும் இடங்களில் எல்லாம் நம்முடைய கண்களில் நின்றும் தாரைதாரையாகக் கண்ணீர் பெருகும்படி செய்துவிடுகிறான். ஆனால் அவன் வீரத்தையும், வியப்பையும், ரௌத்திரத்தையும் தன் சொந்தமாக்கிக் கொண்டு விட்டான் இவ்வளவு ரஸபாவங்களையெல்லாம் தன் காவியத்தில் அமைத்து அதை ஒரு பெரிய நாடக அரங்கமாகவே ஆக்கிவிடுகிறான். அவன் அந்த அரங்கத்தில் நடத்தும் பாத்திரங்கள் எல்லாம் உயிர் ஓவியங்களாக நமக்குக் காட்சி அளிக்கிறார்கள். 'கம்பன் என்ற பெயரைக் கேட்ட அளவிலே தமிழ்க்கவிதா மண்டலத்தின் மகோன்னதமான உச்சியும், கற்பனை உலகத்தின் விரிவும் சக்தியும், தமிழ் நாட்டின் கலைவாழ்வின்

வளமும் சுவையும், எல்லாம் ஒரு நாடக அரங்கத்திலே தோன்றுவது போலத் தென் படுகின்றன.

இத்தகைய ஓர் அருமையான நூலைத்தான் உங்கள் கையில் நான் கொடுக்க விரும்புகிறேன். நூல் அளவில் பெரியது: ஆதலால் அதில் சிறந்த கவிச்சுவை நிறைந்த பாடல்களை மட்டும் பொறுக்கியெடுத்துக் கொடுக்க உத்தேசம். இப்போது பால காண்டத்தில் நூறு பாட்டுக்கள் உங்களுக்குக் கொடுக்கப்படுகின்றன. ஆர அமர இருந்து படித்துச் சுவைத்துப் பாருங்கள். கம்பன் பெருமையை நீங்கள் தெரிந்து கொள்வீர்கள். கம்பன் புகழ் பாடிக் கன்னித் தமிழ் வளர்ப்பதில் நீங்களும் பங்கு பெற்று மகிழ்வீர்கள்.




**பால காண்டம்:**

பல ஆயிரம் வருஷங்களுக்கு முன்னால், வட இந்தியாவிலே கோசல நாட்டைத் தசரதன் என்னும் சக்கரவர்த்தி ஆண்டு வந்தான். அவனுடைய ராஜதானிப் பட்டணம் அயோத்தி. அவனுக்கு மனைவிமார் மூன்று பேர். அவர்கள் கோசலை, கைகேயி, சுமித்திரை எனப்படுவார்கள். வெகுகாலம் வரை தசரதன் புத்திரப்பேறு இல்லாதிருந்தான். அவன் புத்திரகாமேஷ்டி யாகம் செய்ததின் பலனாக, கோசலையிடத்தில் இராமனும், கைகேயியிடத்தில் பரதனும், சுமித்திரையிடத்தில் இலக்குமணனும் சத்ருக்கனனும் பிறந்தார்கள். குழந்தைகள் நால்வரும் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாகவே வளர்ந்து வந்தனர். தக்க பிராயம் வந்ததும், அவர்கள் வில்வித்தை, வாள் பயிற்சி, யானையேற்றம், குதிரையேற்றம் முதலியன பயின்றார்கள். இளங்குமரர் நால்வரிலும் இராமனே குணத்திலும் பராக்கிரமத்திலும் சிறந்து விளங்கினான்.

விசுவாமித்திரர் ஒரு மகரிஷி. இவர் ஒரு பெரிய யாகம் செய்தார். இவருடைய யாகத்தை அரக்கர்கள் கெடுத்துவந்தனர். ஆகையால், இவர் தசரதனிடம் சென்று, அந்த அரக்கர்களை அழிக்க இராமனைத் தம்முடன் காட்டிற்கு அனுப்பும்படி கேட்டார். இராமனை அனுப்பத் தசரதன் மிகவும் கஷ்டப்பட்டான். ஆயினும் தனது குலகுருவாகிய வசிஷ்டர் சொன்னதின் பேரில் அவன் இராமனை விசுவாமித்திரருடன் அனுப்பி வைத்தான். இராமனை விட்டு என்றும் பிரியாத இலக்குமணனும் கூடச் சென்றான். இராமன், விசுவாமித்திரரின் யாகத்தைக் கெடுக்கவந்த தாடகை, சுவாகு முதலியோரைக் கொன்று, அந்த யாகத்தை நிறைவேற்றிவைத்தான். அப்பால் விசுவாமித்திரர் இராம லக்குமணர்களை அழைத்துக்கொண்டு மிதிலைக்குச் சென்றார். போகிற வழியில் கல்லாயிருந்த அகலிகை இராமனது பாதம் பட்டதால் சாப விமோசனம் அடைந்து, கல்லுருவம் நீங்கித் தன் சுய உருவம் அடைந்தாள். மிதிலையில் இருந்து அரசாண்டுவந்த சனகனிடம் மிகவும் பலமுடையதான வில் ஒன்றிருந்தது. அந்த வில்லை வளைத்து நாண் ஏற்றுபவருக்கே தன் மகள் சீதையை மணம்செய்து கொடுப்பதாய் அறிவித்திருந்தான் சனகன். பல அரசர்கள் வந்து அந்த வில்லை வளைக்க முயன்று முடிவில் தோல்வி யடைந்தார்கள். இராமன் அந்த வில்லை எடுத்தான்: வளைத்தான்: அது ஒடிந்தது. சனகன் சந்தோஷமடைந்து சீதையை இராமனுக்கு

மணம்செய்து கொடுத்தான். சீதையுடன் இராமன் அயோத்திக்குத் திரும்பினான். வருகிற வழியில் பரசுராமனது கர்வத்தையும் அடக்கி அவனையும் பங்கப்படுத்தினான்.

## அயோத்தியா காண்டம்:

சில வருஷங்கள் சென்றன. தசரதனுக்கோ முதுமைப் பருவம் வந்தது. தன் சீமந்த புத்திரனான இராமனிடம் ராஜ்யத்தை ஒப்படைத்துவிட்டுத் தான் காட்டில் சென்று தவம் செய்ய விரும்பினான். இராமன் முடிசூடப்போகிறான் என்பதை அறிந்த நகர மக்கள் எல்லோரும் சந்தோஷப்பட்டார்கள். அயோத்தி நகரமும் அற்புதமாக அலங்கரிக் கப்பட்டது. இந்தச் சமயத்தில், கிழக் கூனியான மந்தரையின் சூழ்ச்சியால், கைகேயி தசரதனிடம் தான் முன்னர் பெற்றிருந்த இரண்டு வரங்களைப் பெறுகின்றாள். பரதனுக்குப் பட்டாபிஷேகம் செய்யவேண்டு மென்பது ஒரு வரம்: இராமனைப் பதினான்கு வருஷம் காட்டிற்கு அனுப்ப வேண்டு மென்பது மற்றொரு வரம். இதைக் கேட்ட தசரதன் மனம் உடைந்து வருந்தினான். தந்தை சொல் காப்பது தன் கடன் என்று உணர்ந்த இராமன் காட்டிற்குப் புறப்பட்டான். இலக்குமணனும் சீதையும் உடன் சென்றார்கள். நகர மாந்தர் பட்ட துயருக்கோ அளவில்லை. தசரதனோ, புத்திர சோகத்தால் மாண்டான்.

அயோத்தியில் இத்தகைய சம்பவம் நடக்கும் போது கேகய நாட்டிலுள்ள தன் மாமன் வீட்டிற்குச் சென்றிருந்தான் பரதன். அவன் அயோத்திக்குத் திரும்பி வந்ததும் நடந்ததை அறிந்து, அளவில்லாத துன்பம் அடைந்தான். இப்படிப்பட்ட ஒரு பெரும் பழியைத் தேடிவைத்த தன் தாயாரைக் கடிந்தான். இராமன் சென்ற காட்டிற்கே சென்று, அவனை அயோத்திக்குத் திரும்பிவந்து அரசாளும்படி வேண்டினான். இவன் விருப்பத்திற்கு இராமன் இணங்காத போது, அவனுடைய பாதுகைகள் இரண்டையும் பெற்று வந்து, அவைகளுக்கே பட்டாபிஷேகம் செய்து, இராமனுடைய பிரதிநிதியாக இருந்து அரசாண்டு வந்தான்.

## ஆரண்ய காண்டம்:

தண்டகாரண்யம் புகுந்த இராமன், கோதாவரி நதிக் கரையிலே, பஞ்சவடி தீரத்திலே, ஒரு பர்ணசாலை கட்டிக்கொண்டு, தன் தம்பி இலக்குமணனுடனும், மனைவி சீதையுடனும் வாழ்ந்துவந்தான். அப்பொழுது இலங்கை அரசன் இராவணன் தங்கை சூர்ப்பணகை என்பவள் வந்து, இராம லக்குமணரின் அழகைக் கண்டு, அவர்களில் ஒருவரை மணந்துகொள்ள ஆசைப்பட்டாள். இந்த அரக்கியை அவர்கள் வெறுத்து ஓட்டியும் அவள் போகாது நிற்கவே அவளை அவமானப்படுத்த, இலக்குமணன் அவள் மூக்கை அரிந்துவிட்டான். மூக்கறுபட்ட மூளி சூர்ப்பணகைக்காகப் பரிந்து வந்த கரதூஷணாதி ராக்ஷசர்களையெல்லாம் இராமன் கொன்று தீர்த்துவிடுகின்றான். இதன் பின்னால் அவள், இலங்கைக்கு ஓடி, தன் அண்ணனான இராவணனிடம் நடந்ததைச் சொல்லி, இராமன் மனைவியான சீதையை அவனுக்காகத் தூக்க எண்ணியபோது தான் மூக்கறுபட்டதாகவும் கூறுகிறாள். சீதையின் அழகைச் சூர்ப்பணகை எடுத்துக் கூறக் கேட்ட இராவணன், சீதையினிடம் மோகம் கொண்டு, வஞ்சனையால் அவளைக் கவர்ந்து சென்று, அசோகவனத்திலே சிறைவைத்து விடுகிறான்.

## கிஷ்கிந்தா காண்டம்:

சீதையைத் தேடி புறப்பட்ட இராமனும் இலக்குமணனும், கிஷ்கிந்தையில் அனுமான்,

சுக்ரீவன் முதலிய வானர வீரர்களைச் சந்திக்கிறார்கள். சுக்ரீவனுக்காக, அவனது அண்ணனான வாலியை இராமன் கொன்று, அவனது நட்பைப் பெறுகிறான். அனுமனாதி வானரர் நான்கு திசைகளிலும் சென்று சீதையைத் தேடுகிறார்கள்.

## சுந்தர காண்டம்:

அனுமன் கடல் கடந்து இலங்கை சென்று, அசோகவனத்திடையே சிறையிருந்த சீதையைக் கண்டு, தான் இராமதூதன் என்றும், அவளுக்கு விரைவில் விடுதலை கிடைக்கும் என்றும் சொல்லுகிறான். பலம் மிகவும் உடைய இந்த அனுமன், இலங்கை நகரிலே அசோகவனத்தை அழித்து, இராவணனது சேனாவீரர் பலரையும் கொன்று, இலங்கை நகரையே தீயிட்டுக் கொளுத்திவிட்டுத் திரும்பிவந்து, இராமனிடம் சீதை இலங்கையிலே சிறையிருப்பதைக் கூறுகிறான்.

## யுத்த காண்டம்:

இராமனும் இலக்குமணனும், வானர சேனையுடன், இலங்கைக்குச் செல்கிறார்கள். இராமேஸ்வரத்துக்கும், இலங்கைக்கும் இடையிலுள்ள கடலிலே பெரிய அணை ஒன்று கட்டி அந்த அணைவழி நடந்து, சேனாவீரரும் பிறரும் இலங்கை சேர்கிறார்கள். இலங்கை அரசன் தம்பியான விபீஷணன், தன் அண்ணனை வெறுத்து ஒதுக்கிவிட்டு, இராமனிடம் வந்து சரண் புகுந்துவிடுகிறான். இராம-ராவண யுத்தம் நடக்கிறது. கும்பகர்ணன், இந்திரசித்தன் முதலிய வீரர்கள் எல்லோரும் மாண்டு மடிகிறார்கள். கடைசியில் இராமன் இராவணனையும் கொன்று வெற்றிமாலை சூடுகிறான்: சீதையும் சிறையிலிருந்து மீட்கப்படுகிறாள். இலங்கா நகரத்தை விபீஷணனுக்குப் பட்டம் கட்டி வைத்துவிட்டு, இராமன் சீதா சமேதனாய் அயோத்தி வந்து முடிசூடிச், சகலரும் போற்றும் வண்ணம் அரசுபுரிகிறான்.





# கம்பனில் நட்பு

**-அணிந்துரை-**

**(அமரர் கம்பன் அடிப்பொடி)**

கேரளப் பல்கலைக் கழகத்து எம்.ஏ. மாணாக்கியருள் ஒருவரான செல்வி ஜாஸ்மின் ஆசிர் தமது தேர்வின் ஒரு பகுதியாக, "கம்பனில் நட்பு" என்னும் இப் பொருளாய்வுக் கட்டுரையை ஆக்கியுள்ளார். மொத்தமாகச் சொன்னால் 'இக்கட்டுரை, நோக்காலும், போக்காலும், செவ்விதின் அமைந்திருக்கிறது' என்று துணிந்து கூறலாம். இவர்க்கு வழிவகுத்துக் கொடுத்து நெறி காட்டிய துறைப் பேராசிரியர், ஆசிரியர்கள் ஆகியோர் நம் பாராட்டுக்கு உரியர். கற்கும் காலத்தே இத்தகைய பணியிற் கற்போரை ஈடுபடுத்திப் பயன் வளர்க்கும் நல்லாசிரியர்கட்கு நாடும், மாணாக்கர்களும் கல்வியுலகும் பெரிதும் கடமைப்பட்டிருக்கின்றனர்.

கம்பனில் காணும் நட்பு நயங்களை ஆராய முன்வந்த கட்டுரையாளர் முதலில்) பொதுவாக, நட்பினை ஆராய்கிறார். அதில் அன்பே நட்புக்கு அடிமுதல் என்பதைத் தெளியப் புலப்படுத்துகிறார். அவ்வன்பு படரும் இடம் பற்றி அதற்கு ஏற்படும் பற்பல பெயர்களையும் சுட்டிச் செல்லும் இவர் சங்க காலப் பாடல்களில் இருபாலார் இடையே அரும்பி மலரும் காதலையே 'நட்பு' என்று பரக்கப் பேசப்படுதலை கூறத் தவற வில்லை.

"நட்பு இருவேறு பாலாரிடை மட்டும் தோன்றுவதில்லை; இரு ஆண்களிடையிலும், இரு பெண்களிடையிலும் இரு வேறு கூட்டத்தாரிடையிலும் நட்பானது தோன்றி வளரும் என்றெல்லாம் எடுத்துரைத்து, இருவேறு பாலாரிடையில் முகிழ்க்கும் நட்பு சாதாரணமானது; இயல்பானது. ஆனால் ஒரே பாலில் இருவரிடைத் தோன்றும் நட்பே சிறப்பானது என்ற கருத்தைப் பிளேட்டோ மொழியில் விளக்கி நிற்கிறார்.

பின்னர் நட்பு என்ற சொல்லின் பகுதி பற்றி ஆய்கிறார். 'நள்,' 'நண்' என்ற இரு சொற்களையும் ஆய்ந்து 'நண்'ணே முதலிற் றோன்றி 'நன்' எனத் திரிந்திருக்க வேண்டும் என்று சீரிய முறையில் செவ்விய முடிவுக்கு வருகிறார். "வாழ்க இவர் நெறி" என, நாமும் வாழ்த்துவோமாக!

மேலைநாட்டுத் திறனாய்வாளர் பலரின் கருத்துக்களை எல்லாம் மனக்கொண்டு பார்க்கும் பொழுது கம்பனில் காணப்பெறும் நட்பு நமக்கு மேலும் பல அருமைப்பாடுகளை உணர்த்திநிற்பதைக் கட்டுரையாளர் நனியுணர்ந்து செயல்படும் சீர்த்தி நன்கு புலப்படுகிறது. கம்பனை நன்கு புரிந்துகொள்ள சங்க காலந்தொட்டுப் பாரதி காலம் வரையுள்ள பல நூல்களையும் ஆய்ந்து 'நட்பு' என்னும் நல்முத்துக்களைத் திரட்டி, அவை எப்படி யெல்லாம் ஒளிருகின்றன என்பனவற்றை விரிவாகப் புலப்படுத்திக் கட்டுரைக்கு வளமான அடித்தளத்தை அமைத்துக் கொண்டிருக்கிறார்.

சாதாரண மக்கள், சிற்றரசர்கள், பேரரசர்கள் ஆகியோரிடைப்பட்ட நட்பு முறைகளை விளக்கிப் பின் சங்கச்

சான்றோர்களில் அவ்வை-அதிகமான், கபிலன்-பாரி, பிசிராந்தை-கோப்பெருஞ் சோழன் ஆகிய நட்புக்கு எடுத்துக்காட்டாய் நின்று விளங்கும் நல்லோர்களின் நட்புத்திறத்தை நயம்பட உரைக்கின்றார். சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப் படை, மதுரைக்காஞ்சி ஆகிய மூன்று பாட்டுக்களில் காட்டுகிறார். இங்ஙனமாக 'நட்பு' என்பது உள்ளத்து அரும்பும் ஓர் உணர்ச்சி (காரண காரியம் கடந்த உள்ளுணர்வு) என்பதைப் புலப்படுத்துகிறார்.

பின்னர் நட்பின் தரத்தைத் தலை, இடை, கடை என நாலடி, நீதிவெண்பா நெறியில் மூன்றாக வகுத்துத் தக்க உபமானங்களுடன் காட்டுகிறார். முந்தையர் கருத்துக்களைத் திருக்குறள் உள்ளிட்ட அறநூல்கள் வாயிலாகக் கண்டு தேர்ந்து திரட்டித் தருகிறார். அடுத்துக் காப்பிய உலகில் காணும் நட்புத் திறத்தை ஆராயத் தொடங்குகிறார்.

காலத்தால் வில்லி கம்பனுக்குப் பிந்தியவரே ஆயினும் கதையின் பழமை நோக்கிப் பாரதத்தைத் 'காப்பிய நட்புப் பகுதியில் முதலில் எடுத்துக் கொண்டு கண்ணன்-பார்த்தன் நட்பையும், கன்னன்-துரியோதனன் நட்பையும் நன்கு எடுத்துப் பேசுகிறார். கன்னன் துரியோதனன் நட்பு எத்துணை வலிமையானது, நன்றிமறவா நலனுடையது, உரிமை தருவது, நம்பிக்கை நிறைந்தது என்பனவற்றையெல்லாம் நன்கு சித்திரிக்கிறார். இவ்வமயத்தில் எங்கள் பகுதியில் கன்னன் வாய்மொழியாக வழங்கும் ஒரு பாடல் கருதத் தக்கது அஃதாவது:

**"இன்னவன் இனியான் என்று யாவரும்
அறியா என்னை
'மன்னவன் இவனாம்' என்று மாமணி
மகுடம் சூட்டித்
தன்னொடும் கூட்டி உண்டு, தார்மணி
பொறுக்கிக் கோத்த
மன்னவன் செய்த நன்றி மறப்பெனா
பிறப்புக் கெல்லாம்"**

நன்றி மறவா நட்புக்கு கன்னன் ஒப்பற்ற பாத்திரமாகும். அவனை முற்பட எடுத்துக்கொண்ட செல்வி ஆசிர் பாராட்டுக் குரியவர்.

இதற்குப் பின் மணிமேகலை, பெருங்கதை, சிந்தாமணி ஆகியவற்றில் மிளிரும் நட்பு ஓவியங்கள் நமக்குக் காட்சிதரச் செய்கிறார். இவை யாவும் கம்பனை, கம்பன் பெருமையை நன்குணர்த்த ஆக்கிய பின்னணிகளாகப் பிறங்குகின்றன.

இந்தக் கட்டுரையை முழுதும் படித்தால் நமக்குத் தோன்றுவது இதுதான்: வலிந்து தம்பால் திணிக்கப்பட்ட ஒரு பொருளை ஆய வேண்டிய நிர்ப்பந்தத்தால் இவர் கம்பனைக் கற்கவில்லை; கம்பனில் உள்ளம் தோய்ந்து துய்த்துக் கற்றதன் விளைவே கட்டுரையாக மலர்ந்து மணக்கிறது. இந்தக் கருத்து நமக்கு ஏற்படக் காரணமாய் விளங்குவது கம்பனைப்பற்றி இவர் கூறும் கருத்துக்களே! அவற்றில் சிலவற்றை முதலிற் காண்போம்:

"தற்காலத்தில் விரிந்து வளர்ந்துவரும் மேனாட்டு இலக்கிய ஆய்வுக் கலையின் அளவைகளுக்கும் எஞ்சாத கலைச் செல்வம் அவரது (கம்பரது) படைப்பு"

"கம்பரின் தோற்றம் தமிழிலக்கிய வரலாற்றில் ஒரு புதிய பாதையைக் காட்டிற்று. ஆழ்வார்களும், நாயன்மார்களும் தோற்று வித்த பக்திப் பெருவெள்ளம் தணியத் தொடங்கிய போது, அப்பக்தி உணர்ச்சியைக் காவியத்தின் வாயிலாக மக்கள் உள்ளத்தில்

கிளர்ந்து எழச் செய்தவர் கம்பர்"

"இராமனும் சீதையும் உலகில் எல்லா நாட்டிலும் எக் காலத்திலும் வாழ்ந்துவரும் மக்களால் போற்றிக் கடைபிடிக்கத் தகும் இலட்சிய வடிவாய் அமைந்த பாத்திரங்கள்"

''கம்பராமாயணத்தில் கம்பரது தமிழிலக்கியப் புலமை, பிறமொழிப் பயிற்சி, கற்பனை வளம், காவிய இன்பம், சொற்களை ஆளும் ஆற்றல், கருத்துக்களை நயம்பட விளக்கும் முறை, கவிதையை உருவாக்கும் பாங்கு, சந்தங்களை அமைக்கும் திறன் முதய புலமைக் கூறுகள் கற்போர் உள்ளத்தைக் கவர்கின்றன"

''கம்பரின் கவிதை நுனிப் புல் மேய்வார்க்கு முதலில் பொருள் விளங்குதல் அரிது.---- கம்பன் காவியத்தை ஆழ்ந்து கற்று அதன் நயத்தை உணர்ந்து போற்றுவோரின் புலமைக் கேற்ப கம்பன் பெருமையும் எல்லையின்றி விரிந்து செல்லும்."

"பாத்திரப் படைப்பில் கம்பருக்கு இணை அவரே"

என்றெல்லாம் கூறியபின். இறுதியில், "வள்ளுவர் கூறும் இலக்கணங்களுடன் கம்பர் கருத்துக்கள் ஒப்பிட்டு ஆராய்ந்து கற்றற்குரியனவாகும்"

என முடிப்பது இவர்தம் புலமைக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

இனி, கம்பனை-அவன் வடித்துக் காட்டும் வாழி நண்பினை-எடுத்துரைக்கும் பாங்கினை அறிந்து மகிழச் செல்லலாம். ஆனால், அதற்கு முன் ஒரு கருத்தை இங்கேயே புலப்படுத்தி விடவேண்டும். "தெய்வ மாக்கவி" என்ற சொற்றொடர் வான்மீகியைக் குறிப்பதாகக் கட்டுரையாளர் கருதுகிறார். பல வேறு அறிஞர்களும் அங்ஙனமே கருதியும், எழுதியும் பேசியுமுள் ளார்கள். வான்மீகியின் இராமாயணக் கட்டுக் கோப்பைக் கம்பன் பெரும்பாலும் தழுவிக்கொண்டானே அன்றி முற்றும் ஏற்றுக் கொண்டானில்லை. வடமொழியாளரும் கூட, வான்மீகியை 'ஆதிகவி' என்பதற்குமேல் ஏற்றங் கூறினாரல்லர். 'தெய்வகவி' என்று யாரும் எங்கும் முன்னர்க் கூறிய செய்தியும் கிட்டுமாறில்லை. (இப்படிக் கூறுவதால் வான்மீகியைக் குறைத்து மதிப்பிடுவதாக யாரும் கொள்ளலாகாது. என்னப்பன் கம்பனே "வாங்க அரும் பாதம் நான்கும் வகுத்த வான்மீகி" என்று போற்றி நிற்பான்.) ஆனால் வள்ளுவனைத்தான் பொய்யில் கேள்விப் புலமையினோர் ஆகிய சங்கப் புலவர்கள் 'தெய்வப் புலவர்', 'தெய்வத் திருவள்ளுவர்', 'தேவிற் சிறந்த திருவள்ளுவர்' 'தேவர் திருவள்ளுவர்' என்றெல்லாம் பாராட்டிப் பரவுவாராயினர்.

வள்ளுவன் அருளிய அறத்தின் மாண்பை ஒளிரச் செய்யவே கம்பன் காப்பியம் சமைத்தான். குறளறத்தை மிளிரச் செய்ய முற்றிலும் பொருத்தமுள்ளதா யிருந்த இராமக்தையை வான்மீகி முனிவனிடமிருந்து பெற்றான். கதையின் கட்டுக்கோப்பு தமிழர் பண்பாட்டையும், வள்ளுவன் அறத்தையும் எடுத்துக் காட்டத் தக்கதா யிருப்பதைக் கண்டான். இமயக் கல் கண்ணகியைச் சமைக்க உதவியதைப் போல, வான்மீகியின் கதை வள்ளுவன் அறத்தை வடித்துக் காட்ட முற்றிலும் தரமுள்ளதாயிருந்தது. மிக்க மகிழ்ச்சியுடன் அக் கதையை எடுத்துக் கொண்டான். அதைப் புலப்படுத்தவே,

**"பொய்யில் கேள்விப்**
**புலமையினோர் புகல்**
**தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே"**

**"காசில் கொற்றத் திராமன் கதை (யை)**
**ஆசை பற்றி அறைய லுற்றேன்"**

என்று பாடிச் செல்கிறான் கம்பன் என்பது அடியனேன் கருத்து. இனி கட்டுரை நூலுள் செல்வோம்.

கட்டுரையாளர் முதலில் "யாதினும் இனிய நண்பன்" என்ற தலைப்பில் ஒப்பற்ற நட்புடைய-கரைகாணாக்காதலான் ஆன -குகனை ஆய்கிறார். ஆம்: அவன்தானே காப்பியத் தலைவனுக்கு முதல் தோழன்,? பயன் கருதாது புரியும் நட்பை, 'தூய நட்பு', 'தன்னல மற்ற நட்பு', தன் முனைப்பற்ற நட்பு, என்றெல்லாம் விதந்தோதுவதன் மூலம் கட்டுரையாளரின் தெளிந்த புலமையும், வகுத்துரைக்கும் திறமையும் நன்கு புலப்படுகிறது.

வான்மீகியுடன் ஒப்பிட்டு, குகனின் குண இயல்பையும், குல இயல்பையும் சித்திரிப்பதில் கம்பன் எவ்வளவு சிறந்து விளங்குகிறான் என்பதையும், இராமன் மாட்டுக் குகன் கொண்ட தீராக் காதலையும், குகன் மாட்டு இராமன் அளவற்ற அன்புப் பெருக்கையும் தெளிந்துரைக்கிறார்.



**"அன்பினால் அமைந்த காதல்**
**தெரிதரக் கொணர்ந்த என்றால்,**
**அமிழ்தினும் சீர்த்த அன்றே?"**

என்று இராமன் அகம் மலர, முகம் மலர்ந்து, குகன் கொணர்ந்த தேனையும் மீனையும் "அரிய; தாம் உவப்ப" என்று கூறிய அருமைப்பாட்டையும், நாகரிகத்தையும் ஆய்ந்து கண்டு பாராட்டுகிறார். ஆனால்

**"பரிவினில் தழீய என்னில் பவித்திரம்;**
**எம்மனோர்க்கும் உரியது"**
என்ற பிற்பகுதியை ஏனோ கூறாதுவிட்டார்?

பிரிவு(Sympathy) என்பது அன்பு செறிந்த உள்ளத்தில் ஏற்படும் ஆற்றாமை காரணமாக விளையும் ஒருவகை இரக்கம் ஆகும். அத்தகைய பரிவு சூழ்ந்த ஒன்று எதுவாயினும் அது தூய்மையானது மட்டமல்ல; புனிதம் என்றாலும் போதாது; எவ்வகைக் குறையுமற்ற தெய்வீகம் என்று கூறினால்தான் ஒருவாறு ஒக்கும் என்று கருதியே 'பவித்திரம்' என்றான் மாகவி கம்பன்.



# கவிச்சக்கரவர்த்தி

## (கம்பன் அடிசூடி)

வ.வே.சு. ஐயர் அவர்கள் சொல்லு -வார்கள்:

"In the Ramayana of Kamban the world possesses an epic which can challenge comparison not merely with the lliad and Aeneid, Paradise Lost, and Mahabharatha but with its original itself, namely, the Ramayana of Valmiki"

அப்படித் தன் மூல நூலான வான்மீகி இராமாயணத்துடனேயே ஒப்புநோக்கி நிற்கக் கூடிய ஒப்புயர்வற்ற நூலைப் படைத்தவன் கம்பன்.

கம்பனே ஒரு விசுவரூபன்தான். 'உலகம் யாவையும்' என்று தன் காப்பியத்தைத் தொடங்குகிறபோதே அவன் உள்ளத்தின் ஆழ அகலம் நமக்குத் தெரியவில்லையா? அவன் சரணம் சொல்லுகிற இறைவன் எந்த ஒரு குறிப்பிட்ட இனத்தாருக்கோ, சமயத்தவர்க்கோ, நாட்டினர்க்கோ சொந்த-மானவன் அல்லனே! எல்லோராலும்-ஆம் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளக்கூடிய குணங்களைக் கொண்ட ஒரு இறைவனிடத்தி லேதான் தலைவனிடத்திலே தான் சரணடைகிறான்

சாதாரணமாக யாரும் தம் இஷ்ட தெய்வத்தை-வழிபடு தெய்வத்தைத் துதித்து, காப்புக் கூறித்தான் தொடங்குவார்கள். அது ஒரு நிலை. ஆனால் கம்பன் உலகமாகவி. கவிச்சக்கரவர்த்தி. அவன் நிலை வேறு, இனம், சமயம், நாடு என்ற குறுகிய எல்லைகளை எல்லாம் தாண்டி உயரப்போய், ஆம், நாம் அண்ணாந்து பார்க்க வேண்டிய உயர்ந்த உயரத்திற்கே போய், உலகளந்த பெருமான் போல வரம்புகள் அனைத்தையும் மீறி, அனைத்திற்கும் அப்பாற்போய் இந்த உலகம் அல்ல, உலகங்கள் யாவற்றையும் தன் அன்பால் நேசங்கொண்டு உறவாடி, அவற்றின் தலைவனை வணங்குகிறான். எந்த உருவமும், பெயரும் கூறாது, ஒரு தனிப் பெரும் பொருளை, திணை, பால், எண், இடம் எதுவும் சுட்டிக்காட்டாமல் வணங்குகிறான்.

அந்த 'யாவையும்', என்ற சொற்பிரயோகத்தில் இருக்கிற சுகம் இருக்கிறதே அதை அனுபவித்தால்தான் தெரியும். எங்கே 'எல்லாம்' என்று போட்டுப் பாருங்கள். அந்த பாவம் கிடைக்காது. 'யாவையும்' என்றாலும், 'எல்லாம்' என்றாலும், பொருள் வேறுபடாது என்றாலும், 'யாவையும்' என்கிற தொனியே - வேறு. மறுபடியும் சொல்லித்தான் பாருங்களேன். இப்படிக் காப்பியத்தைத் தொடங்குவதிலேயே கம்பன் தன்னை ஒரு விசுவரூபியாக இனங்காட்டிக் கொண்டுவிடுகிறான். இன்னும்காப்பி யத்திற்குள்ளே நுழைந்தால் அவன் காட்டுகிற விசுவரூப உள்ளத்தின் மகத்தான அருமை நம்மை மெய்மறக்கச் செய்துவிடும்.

அந்தக் கம்பன் என்கிற மாபெரும் கவிஞன் விசுவரூபமெடுக்க உதவுகிற சாதனமே இராமகாதை.

சங்க காலத்திற்கு முன்பிருந்த இராமகாதை தமிழ் மக்களின் மனத்தைக் கவர்ந்துள்ளது. அகநானூறு, சிலப்பதிகாரம் இவை எல்லாம் இராமகாதை நிகழ்ச்சிகளை எடுத்துச் சொல்லும். சிலப்பதிகாரக் காலத்திலும், ஆழ்வார்கள் காலத்திலும் இராமன் கதை திருமால் அவதாரக் கதையாகக் கருதப் பெற்றமை தெளிவாகும்.

'அறம் வெல்லும், பாவந்தோற்கும்' என்ற உண்மையை உணர்த்த இராமகாதை சிறந்ததொரு சாதனமே என்று கருதியதோடு, வான்மீகி வழங்கினாலும், தமிழகத்தில் மக்கள் உள்ளங்களில் ஆழங்காற்பட்டுவிட்ட கதையையே தன் காவியத்திற்கு வித்தாக எடுத்துக் கொள்ளுகிறான். அந்தக் கதைக் கரு ஏற்கனவே காலத்தை வென்று நின்றிருப்பதை அவன் பரிபூரணமாக உணர்ந்து தான் அதனை எடுத்தாண்டிருக்கிறான். தன் காலத்திலேயே காலத்தை விஞ்சி நிலைத்து நின்று வழங்கி வரும் ஒரு கதைக்கருவே, இனியும் எதிர்காலத்திலும் காலத்தை வென்று என்றும் நின்று நிலவும் என்று உணர்ந்தே இராமகாதை என்ற பட்டை தீட்டப் பெறாத வைரத்தை முழு மணியாக்கித் தருகிறான். இந்த சிரஞ்சீவித் தன்மை நிறைந்த கருவைக் கொண்டுதான், தன் மனத்தைப் பெரிதும் ஈர்த்து நின்ற வான்புகழ் வள்ளுவத்திற்கு இலக்கியமாக்கிக் காட்ட விசுவரூபம் எடுத்திருக்கிறான்.

இராமாவதாரத்தின் முக்கிய நோக்கமே மனிதன் வாழ்வாங்கு வாழ்ந்து வானுறையும் தெய்வமாகலாம் என்று காட்டுவதே. மனித தெய்வமாக ஒரு மனிதன் ஆகலாம். ஆனால் அதைச் செய்து காட்ட தெய்வமே மனிதனாக வந்து அவதரித்து வாழ்ந்ததாலேயே. இந்தச் சந்தேகம் உங்கட்கு எழுவது நியாயமே. தெய்வமனிதன் மனிதனாக வாழ்ந்ததால், மனிதன் மனித தெய்வமாக முடிந்தது. என்ன, குழப்பமாக இருக்கிறதா? நம் பாஷையில் சொல்லப்போனால் அவதார புருஷன் இப்படியெல்லாம் வாழ்ந்து தெய்வமாகலாமே தவிர, சாதாரணமானவர்கள் இப்படி ஆவது சாத்தியமாகாது.

இது உண்மையானால், அதாவது நாம் கடைப்பிடித்து ஒழுகுவது கடினம் என்பது உண்மையானால், இராமாயணம் காலத்தை வென்று, இவ்வளவு காலம் சிரஞ்சீவித் தன்மையுடன் நிலைத்து நின்றிருக்க முடியாது. வேறு எதுவும் பார்க்க வேண்டா. இன்றைய செய்தித்தாளை எடுத்துப் பாருங்கள். இன்றைக்கு எவ்வளவு இடத்திலே இராமாயணம் சொல்கிறார்கள் என்று எத்தனை மாதங்களாகத் தொடர்ந்து சொல்கிறார்கள் என்று: நமக்கே பிரமிப்பூட்டும். எங்கேனும் ஓரிடத்தில் தினம் இராமாயணம் தொடர் சொற்பொழிவாகவோ, கதாகாலட்சேபமாகவோ, நடந்து கொண்டுதானிருக்கிறது. கேட்கிறவர்கள் இல்லாவிட்டால் நடக்குமா? இது ஒன்றே காலத்தை வென்று நிற்பதற்கு மக்களின் பேராதரவுதான் காரணம் என்பதைப் புலப்படுத்தும். இதைத்தான் அழகாக ஆங்கிலத்தில் சொல்லுவார்கள், கனம் நீதிபதி மகராஜன் அவர்கள்:

"His great poetry keeps its hold firmly on the centuries, because he gives poetic articulation to those timeless problems, which arise at all times and the answers to which will continue to fascinate the spirit of Man till the end of Time."

எல்லாக்காலத்திலும் மனிதனுக்கு எழக்கூடிய பிரச்சினைகளுக்குரிய, என்றும் ஈர்க்கக்கூடிய விடைகளுக்குக் கம்பன் தன்னுடைய கவிமேதாவிலாசத்தால்

அழகூட்டி இணைப்பதால், நூற்றாண்டு காலங்களாக இராம காதை நிற்கிறது.

வடநூலார் ஒரு பாகுபாடு செய்துள்ளனர். வெறும் நீதி நூல்கள், அறஞ்சொல்லும் நூல்கள், தலைவன் தன் ஏவலாளருக்குக் கூறுதல் போன்றவை என்றும், புராணங்கள் நண்பர் ஒருவருக்கொருவர் கூறுதல் போன்றவை என்றும், காவியங்கள் காதலர் பேச்சுப் போன்றவை என்றும் பகுத்துள்ளனர். காதலர் வாழ்விலும், பேச்சிலும் உணர்ச்சிகளே ஆற்றல் மிக்கவை. சொற்களால் உணாத்தலைவிடக் குறிப்பாலுணர்த்தல் மிகுதி என்பதும் தெளிவு. இராமாயணமும் அதுபோல் ஒழுக்கம், அறம் முதலியவற்றை நேரே சொற்களால் உணர்த்துவதைவிட, கற்பனை அனுபவமும், கவிதைநயமும் கொண்டு உள்ளத்தில் தாமே பதியுமாறு செய்துவிடுகிறது. கசப்பு மருந்தை இனிப்பு மிட்டாய்க்குள் வைத்துக் கொடுப்பது போல், அறத்தை எடுத்துரைப்பதை விட, அன்பால் உணரச் செய்து பதிய வைத்தல் பலன் மிகத் தரும் இல்லையா? ஆக தாமாகவே நம் உள்ளத்தில் பதிந்திருப்பதால் தான் நாம் விரும்புகிறோம்: இராமன் தலையில் வசிட்டன் முடி சூடியபோது தத்தம் தலையில் மௌலி சூடியதாக எண்ணினார்களாம். இன்றைக்கும் இராமபட்டாபிஷேகம் நடக்கும் இடங்களில் இக்காட்சி சர்வ சாதாரணமானது என்பதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

அன்றைக்குக் குலசேகரர் வாழ்விலும், இதுதானே நடந்தது. இராமன் வாழ்க்கை நம் வாழ்க்கையோடு ஒன்றியதனால்தானே அவரும் கதை கேட்கும் போதே, பொருக்கெனப் போருக்கு எழுந்தார்? இது தான் இராமகாதையின் தனிச்சிறப்பு. நம்மிடம் பேசும்: நமக்கும் அறிவூட்டும்; ஆனால் நேரிடையாக அன்று, மறைமுகமாக; "பகைவனுக்கும் அருள்" என்று நேரிடையாக உபதேசம் செய்யாது. இராமனின் ஒரு செயல் மறைமுகமாக அதை நம்மிடம் பேசிவிடும்.

இப்படி நம்மோடும் நம் அன்றாட வாழ்க்கையோடும், இணைந்துவிட்ட இராமாயண நாயகன் இராமன் பின்பற்றியதையா நாமும் பின்பற்றுவது கடினம்? இராமனைப் பொறுத்தவரை முழுக்க முழுக்க மனிதனாகத்தான் நடந்து கொள்ளுகிறான்.

காவியமென்பது அனுபவத்தையே சொற்களாக மாற்றித்தரும் மொழிபெயர்ப்பாகும், இலக்கியங்களுக்குள், கதை, நாடகம் முதலியவற்றை விடச் செய்யுளுக்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு. பாடுகிறவரின் அனுபவத்தையே படிக்கிறவர்க்கு அளிக்க வல்லது காவியம். செய்யுளில் அமையும் சொற்களின் ஜாலத்தால், ஒருவகை ஆற்றலால் இந்த அனுபவப் பரிமாற்றம் சாத்தியமாகிறது. எல்லா இலக்கியங்களிலும் சொற்கள் ஆசிரியர்களிடத்தில் குற்றவேல் புரிகின்றன. என்றாலும் கவிஞர்களிடத்தில் அவர்களையும் அறியாமல் அவர்களின் உணர்ச்சிகளுக்கேற்ப சொற்கள் தாமே வந்து அமைந்து மிகச் சிறந்த பொருளை நமக்கு உணர்த்திவிடுகின்றன.

ஒரு அழகான காட்சியைப் பார்த்தாலோ உணர்ந்தாலோ நம் இரு சாராராலும் முடிந்த ஒன்று. ஆனால் கலைஞன் அதற்குத் தன்னுடைய படைக்கும் திறனால், சொல்லாற்றலின் உதவியால் கலை வடிவம் தந்து அழியாமல் காப்பாற்றுகிறான். இதைத்தான் ஷெல்லி சொல்லுவான்:

"poetry is the expression of the best and happiest moments of the happiest and

best minds" என நம்மைப் போன்றவர்கள்தான் அவர்களும். குற்றம் குறைகள் உடையவர்தாம். நம்மைப் போன்றே இன்பத்தையும் துன்பத்தையும் உணர்ந்தவர்கள்தாம். ஆனால் நம்மைவிட மிகுதியாக உணர்கிறார்கள். அதனால்தான் அவர்கள் அந்த உணர்ச்சியை-நம்மிலிருந்து மாறுபட்டு உணர்ந்ததை அல்ல, நம்மைவிட ஆழமாகவும், அழுத்தமாகவும், அதிகமாகவும் உணர்ந்ததை - ஒரு வடிவத்துக்குள் கொண்டுவந்து பிறரும் உணரும் வண்ணம் செய்ய முடிகிறது. 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்' என்று பகிர்ந்து கொள்ள முடிகிறது.

இந்த அனுபவப்பரிமாற்றத்தின் நோக்கம் இன்புறுத்தலோடு அறிவுறுத்தலும் ஆகும். அப்படி ஓர் உணர்ந்த விழுமிய உணர்ச்சியினை இன்புறுத்தலோடு குழைத்து உணர்த்தினால்தான் அங்கே "தாம் இன்புறுவது உலகு இன்புறும்" இல்லாவிட்டால்- அங்கே உயர்ந்த ஒழுக்க உணர்ச்சி உட்பொதிந்து வைக்கப்படாவிட்டால், வெறும் இன்புறுத்தல் வெற்றி பெறாது; காலத்தை வென்றிருக்காது. ஒரு காவியத்தினை நாம் எப்போது வென்று நிற்கிறது என்று போற்றுகிறோம்? அது தன் குறிக்கோளில் வெற்றி பெறும்போதுதான்: அதைவிட்டு அழகாக அமைக்கப்பட்டுள்ளது என்பதால் மட்டுமே ஒரு காவியம் வென்று நிற்கிறது என்று சொல்வதற்கில்லை.

அதனால்தான் உயர்ந்த குறிக்கோளையோ நல் ஒழுக்கத்தையோ எதிர்த்தோ பழித்தோ எழும் காவியம் வாழ்க்கைக்கே எதிரியாதலால் வீழ்ந்து விடுவதைக் காண்கிறோம். "The what is poetically indifferent, it is the how that counts" என்று சொல்லுவார்கள். எப்படிச் சொல்லுகிறார்கள் என்பதுதான் முக்கியமென்றாலும் எதை வேண்டுமானாலும் சொல்விட முடியாது. ஒரு நிழற்படக் கலைஞன் எதைப் படம்பிடிக்கிறான் என்பதை விட எப்படிஅந்தப் படத்தைக் கலையழகு சொட்டப் பிடித்திருக்கிறான் என்று பாராட்டுவதுஉண்மைதான் என்றாலும் ஒன்றை மறந்துவிடக் கூடாது. படம் பிடிக்கப்பட்ட முறையிலேயே கலை அழகு மிளிர்ந்தாலும், பிடிக்கப்பட்ட பொருளின் தரத்தால் அந்தக் கலைஞனின் தரம் குறைந்து விடுகிறது. எதை வேண்டுமானாலும், உயர்ந்த கலைஞன் தன் கலைத் திறமையால் படைத்துத் தந்தாலும் அந்தப் படைப்பு என்னதான் அழகாக இருந்தாலும் வெற்றி பெறாது. ஏனென்றால் cc Literature is என்பதுதான் திறனாய்வாளர்களின் தெளிந்த முடிவாகும்.

தானும் தெளிந்து, கற்பாரையும் தெளிவிக்க வல்லனே ஆசான், இந்தக் கணிப்பில் நம் ஆசான் கம்பன் முற்றிலும் பொருந்திவருவான். அவன் படைத்த இராமாயணம் காலத்தை வென்று இன்றும் நிற்கிறது. அப்படியானால் அதன் நோக்கத்தில், படைக்கப்பெற்ற குறிக்கோளில் வெற்றி பெற்றிருக்கிறதென்றால், அது அழகாகவும் அற்புதமாகவும் ஆக்கப்பட்டிருக்கவேண்டும். அப்படி அழகு மிளிரவும் அற்புதம் தோன்றுமாறும் அமைந்துள்ளது. ஆக்கியோனின் மிகத் திறமையான அனுபவப் பரிமாற்றத்தினால் தான் சாத்தியமாகும். அப்படி அதி திறமையான அனுபவப் பரிமாற்றம் சாதிக்க வேண்டுமானால், ஆக்கியோனின் அனுபவம் மிக விழுமியதாயும், பரந்துபட்டதாயும், அதே சமயத்தில் ஆழமுடையதாயும் இருந்திருக்க வேண்டும். அந்த அதிமதுரமான அனுபவங்களை அப்படியே சாறாகப் பிழிந்து வடித்துத் தந்ததால்தான் கம்பன் 'கவிச்சக்கரவர்த்தி' ஆக இன்றும் நின்று தமிழ் மக்கள் உள்ளங்களில் கோலோச்சி வருகிறான்.

இப்போது சொல்லுங்கள்! ஆசிரியனாய் இருப்பதற்குரிய கம்பனின் தகுயின் மாண்பை!

நமக்கு இப்போது ஒன்று பிடிபடுகிறாற்போல் உள்ளது. உயர்ந்த சிறந்த காவியம் என்பது ஒருவகைக் கலை ஆற்றலால் படைக்கப்படுவது. மனித மனத்தின் ஆழத்தில் புதைந்துகிடக்கும் தன்மைகளையும் அழியாத தத்துவங்களையும் வெளிப்படுத்துவதே அந்த ஆற்றல். ஆகவே. definiterly and deliberately designed to produce an intended result' என்று சொல்வதைப் போல ஒரு பயனை உலகறியச் செய்யத் திட்டமிடப்பட்ட வெளிப்பாடே காவியமாகும்.

மில்ட்டன் சொல்வான்:A good book is the precious life-blood of a master sprit embalmed and treasured up on purpose to a life beyond life" கம்பனின் காவியமும் அவனுடைய உயிர் நிலை பாடஞ்செய்யப் பெற்ற பொக்கிஷமாகும்.

அவன் காலத்தை மட்டுமல்ல, எத்தனையோ கல்பாந்த காலங்களைக் கடந்து நிற்கப் பக்குவமாய்ப் பாடஞ்செய்யப் பெற்ற அனுபவச்சாறு ஆகும். அதனால்தான் classics என்று இவற்றைச் சிறப்பித்துக் கூறுகிறோம். வளர்ந்துவரும் சமுதாய மாறுதல்களுக்கு ஏற்பப் புதிய எண்ணங்களைஉள்ளடக்கி நிற்கும் இயல்பும், ஒவ்வொரு காலகட்டத்திற்கும் தகுந்த வண்ணம் ஓர் உயரிய கருத்தை வலியுறுத்தும் இயல்பும், எல்லாக் காலத்திற்கும் பொருந்திவருகிறாற் போன்ற சில நலம் பயக்கும் கருத்துக்களும் என்று இப்படிப் பலவாறான எதிர் நீச்சல் போடுகிற விஷயங்கள் அடங்கியதுதான் classics ஆகும். அதைத்தான் embalmed என்ற சொல்லால் மில்ட்டன் புலப்படுத்துவான். இதுதான் வாழ்வைக் கடந்த வாழ்க்கையைக் குறிக்கோளாகக் கொண்டு படைக்கப்பட்டுள்ளதாகும்.

உள்ளதை உள்ளபடி சொல்லுவதிலும், உள்ளதை உணர்ந்தபடி சொல்லவல்லதே கவிதைக்கலை. அப்படியானால் கம்பன் இந்த விலங்கியல் சாத்திர அறிவையெல்லாம் வெறுமனே கற்றவன். கற்று அறிந்தவன் மட்டுமல்லன்: அவற்றை உணர்ந்து அறிந்தவனும் கூட, இப்போது சொல்லுங்கள். கம்பன் இவையெல்லாம் எப்படி அறிந்தான்? இதற்கு நம்மால் கூறமுடிந்த ஒரே பதில் 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்பதுதான்.

இலங்கை நகரைப்பற்றிச் சொல்ல வந்த கம்பன் பேசுவான். 'இங்கேயுள்ள மாளிகைகள் பொன்னைக் கொண்டு இழைத்தனவா, மணி கொண்டு பொதிந்தனவா, மின்னால் செய்யப்பட்டவையா, இல்லை எதைக் கொண்டு இயற்றியது என்று இன்னும் கண்டுபிடிக்காத ஒரு வஸ்துவைக் கொண்டு கட்டியதா?' என்று: அப்படி 'என் கொண்டு இயற்றிய எனத் தெரிகிலாத' என்று அவனைப் போலவே நாமும் அவன் மேதாவிலாசத்தைப் பற்றிக் கையை விரிக்கத்தான் வேண்டியுள்ளது. கவிதைக் கலையிலும், இலக்கியக் கலையிலும் மட்டுமே கம்பன் கற்றுத் துறைபோகியவன் அல்லன். அறிவியற் கலையிலும் நுணக்கமான அறிவு நிரம்பப் பெற்றவன். இல்லையேல், ஒரு ஆகாயவிமானம் பறக்கும் முன் முதலில் தரையில் ஊர்ந்து பிறகு (Take off) எடுத்து த் தான் பறக்கும் என்று இராவணன் சீதையைக் கொண்டேகுகிற காலத்தே சொல்ல முடியுமா? அயோமுகியாம் அரக்கியின் கைபட்ட இலக்குவனைக் காணாது திகைத்துத் தேடும் இராமன் பாட்டரி விளக்கு போன்ற அமர்ந்து எரியும் விசையுடைய விளக்கோடு தேடியதாகக்கம்பனால் சொல்ல முடியுமா?

இராம-இராவணப் போரில் வரும் எண்ணற்ற அஸ்திரங்கள், படைக்கலங்கள், ஏவுகனைகள் இவைகளின் ரூபத்திலே இன்றைய அழிவுக் கருவிகளைப் படம் பிடித்துக் காட்ட முடியுமா? அதனாலேதான் மெய்ஞ்ஞானமும் விஞ்ஞானமும் ஒரு சேர, அறிவும் அநுபவமும் உடையவனான கம்பன் 'கழுகைப்பற்றிப் பேசும்போது கழுகாகவே நினைவூட்டுவான். அவற்றுக்கு உடல் மட்டும் இன்னும் விலங்கு உலக மூலமே என்று காட்டத் தனக்குத்மெதரிந்த விலங்கியல் சாத்திர அறிவை மிகத் தெளிவாகக் காட்டுகிறான் கம்பன். ஆகவேதான் அவை இன்றைக்கும் பொருந்துகின்றன. பொருள் சிறந்து, காலச் சூழலிலே எதிர்நீச்சல் போட்டு மேலே வந்திருக்கின்றன. இதைத்தான் கம்பரசிகர் திலகமாம் மகராஜன் அவர்கள் -ஆம், கம்பனை ஆங்கிலத்தில் மொழியாக்கம் செய்து மேம்படுத்திய கனம் நீதிபதியவர்கள் தாம் தமக்கே உரித்தான அழுத்தந் திருத்தமான ஆங்கில நடையில் சொல்லு -வார்கள்.

"In the Ramayana of kamban the world possesses an epic which can challenge comparison not merely with the lliad and Aeneid, Paradise Lost, and Mahabharatha but with its original itself, namely, the Ramayana of Valmiki"

இன்றைய தலைமுறையினராகிய நமக்கு, நேற்றைய தலைமுறையினறான கம்பன், நாளைய தலைமுறை அறிவோடு பேசுவதினாலோ அவன் கடந்த காலத்தினன் அல்லன்: காலங்கடந்தவன் ஆவான்.



